# கவியும் மொழியும்



வித்துவான்
த. நா. சேனாபதி, எம்.ஏ.



அல்லயன்ஸ் கம்பெனி
தபால் பெட்டி நெ. 617
மயிலாப்பூர் :: சென்னை-4

உரிமை பதிவு - ஒன்பதாம் பதிப்பு - ஜூலை 1959

Approved by the Madras T. B. C.
for class use, Non-detailed Study.
Vide Gaz. Page 24 of 4-4-'56

94 ந. பை.

சுதந்திர அச்சகம், சென்னை-4.

# முகவுரை

ரவீந்திரர் உலக மகா கவி. அவர் இலக்கியத்தின் பல துறைகளில் ஈடுபட்டுப் புகழ்வாய்ந்த மேதை. அவருடைய கவிதைகள் மட்டுமல்ல; அவருடைய வாழ்க்கைத் தத்துவங்கள்கூட உலக மக்கள் யாவருக்குமே ஈடுபாடுடையவை. அதனால்தான் அவர் உலகில் எந்த இடத்தில் சென்றாலும், மக்கள் அவரைத் தம் நாட்டு முதுபெருங் கிழவராகக் கொண்டாடி வந்தார்கள். காந்தியடிகள் அவரைத் தம் குருதேவராகவே கருதி வந்தார். அரசியல் துறையில் ரவீந்திரர் ஈடுபடாவிட்டாலும், ஆக்க வழியில் காந்தியடிகளின் பல கொள்கைகளை ஆதரித்து வந்தார். பிரிட்டிஷ் ஆட்சியாளர் சிறிது சிறிதாக மனம் இளகி இந்தியரின் கோரிக்கைக்குச் சமாதான முறையில் இணங்கியதற்கு ரவீந்திரர் போன்ற பேரறிவாளரின் பெருமுயற்சியே காரணம். அவர் பாடிச் சென்ற தாய்நாட்டு வணக்கப் பாடலே இன்று நம் தேசீய கீதமாக விளங்குவது, நாம் பெருமை கொள்ளக்கூடிய செய்தியாகும்.

இந்தச் சிறு நூலில் ரவீந்திரின் வாழ்க்கையிலிருந்து பல புதிய பகுதிகளையும், அவர் அருளிய மொழிகளையும் எடுத்துத் தந்திருக்கிறேன். இவை தமிழ் நாட்டுச் சிறுவருக்கு மிகவும் பயன்படுமென்று நம்புகிறேன்.

ஆசிரியன்

# கவியும் மொழியும்

## 1. பத்மா நதியில்

அப்போது ரவீந்திரருக்கு ஆறு அல்லது ஏழு வயது இருக்கும். அவர் தம் தந்தை யோடு, வங்காளத்தில் உள்ள பத்மா என்ற ஆற்றில் படகில் அடிக்கடி செல்வது வழக் கம். தந்தை படகில் அமர்ந்து கடவுள் வழி பாட்டில் ஆழ்ந்திருப்பார். ரவீந்திரர் பட கோட்டி துடுப்பை ஓட்டுவதையும், மற்ற இயற்கைக் காட்சிகளையும் பார்த்துக்கொண் டிருப்பார்.

அன்று தந்தையின் உடல்நிலை சரியில்லை. அதனால் அவர் படகில் புறப்படவில்லை ; தம் வீட்டிலேயே இருந்தார். மகனைமட்டும் பட

கில் ஏறிப் போய் வரும்படிச் சொல்லியனுப்பி ஞர். படகோட்டி அகமதும் ரவீந்திரரும் பட கேறிப் புறப்பட்டார்கள். அகமது வெயில் பட்டுப்பட்டுப் பளபளப்பான கருநிற மேனி உள்ளவன். ரவீந்திரரைப் பார்த்து, "நீ முதலே யைப் பார்த்திருக்கிருயா, தம்பி?" என்று கேட்டான்.

ரவீந்திரர் ஆவலுடன், "எங்கே? எங்கே?" என்ருர்.

அகமது புன்சிரிப்போடு, "பொறு, அழைத்துப் போகிறேன்" என்ருன்.

ரவீந்திரர் ஆவலே அடக்கிக்கொண்டு படகில் அமர்ந்திருந்தார். அகமது, "அதோ ஆற்றங்கரையில் ஒரு கல் தள்ளித் தோப்பு ஒன்று இருக்கிறது. அந்தப் பக்கம் போகலாம்" என்று சொல்லிக்கொண்டே படகைத் தள்ளத் தொடங்கிஞன்.

அந்தத் தோப்பை நெருங்கியபோது சற்றுத் தொலேவில் மரக்கிளேகள் தாழ்ந்து தொங்கும் இடத்தில் ஆற்று நீரில் கற்பாறை கள் சில இருப்பதைக் கண்டார் ரவீந்திரர். "படகு பாறைமேல் மோதிக்கொள்ளப் போகிறது" என்று கூவிஞர். அகமது கலகல வென்று சிரித்து விட்டான்.

"தம்பி! பார், நன்ருக. பாறை மூழ்கி விடும்" என்ருன். ரவீந்திரர்உற்று நோக்கினர். அப்போது அதற்குக் கண் இரண்டு இருப்பது தெரிந்தது. சற்று எட்டிப் பார்த்தார். அந்தப் பாறை மூழ்கிவிட்டது. மேலும் குனிந்து பார்க்கப் போனர். அப்போது ரவீந்திரர் நிலை தடு மாறித் தண்ணீருக்குள் விழுந்துவிட்டார். சற்று வேறு புறமாகத் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்த அகமது, அவர் விழுந்த ஓசை கேட்டுத் தண்ணீரைப் பார்த்தான்.அதேசமயம் இரண்டு முதலைகள் ரவீந்திரரை நோக்கிப் பாய்ந்தன. அகமது, "ஐயோ!" என்று கூவிக் கொண்டு துடுப்புடன் தண்ணீரில் பாய்ந்தான்; ரவீந்திரரின் காலை ஒரு முதலை கவ்வப் போகும் சமயம் துடுப்பால் ஓங்கி அதன் தலைமேல் ஓர் அடி கொடுத்தான். இரண்டு ஆபத்துக்களை அவன் சமாளிக்க வேண்டியதாயிற்று. நீரில் தத்தளித்துக்கொண் டிருந்தார் ரவீந்திரர். அப்படியே அவரைப் தூக்கிப் படகில் தொற்ற விட்டான். ரவீந்திரர் படகில் குதித்துவிட்டார். அதற்குள் இன்னும் ஒரு முதலை அகமதையே கவ்வ வந்தது. அகமது துடுப்பால் அதன் மண்டையிலும் ஓங்கி ஓர் அடி கொடுத்தான். அது தப்பி ஓடி விட்டது; படகில் ஏறிக்கொண்ட தும் அகமது, "என்ன தம்பி, இப்படிச் செய்து

விட்டாயே! நீ முதலே வாயில் சிக்கி யிருந்தால் அப்பால் எசமான் என்னைச் சும்மா விட்டிருப் பாரா? நானுந்தான் முகத்தைக் காட்ட முடியுமா?” என்று சொல்லி அன்போடு அவரை அணைத்துக் கொண்டான்.

“அப்பாவிடம் சொல்லாதே, கோபித்துக் கொள்வார்” என்றார் ரவீந்திரர்.

“அதுதான் தவறு. நடந்ததைச் சொல்லி விடுகிறேன். என்னைத்தான் கோபித்துக் கொள்வார். அதனால் என்ன?” என்றான் அகமது.

ரவீந்திரர் தம் வீடு திரும்பியதும், தந்தை யைக் கூச்சத்தோடு நெருங்கினார். இதைக் கண்டதும் தந்தை ஏதோ நடந்திருக்கவேண்டு மென்று தெரிந்து கொண்டார். அதற்குள் அகமது நடந்ததைச் சொன்னான். ரவீந்திரர் அப்போது, “அகமது இராவிட்டால் நான் பிழைத்திருக்கவே முடியாது” என்றார். அவர் தந்தை, “நல்லவேளை, அகமது! இனிமேல் கண்ட இடத்துக்கும் அவனை அழைத்துப் போகாதே!” என்று எச்சரித்தார். அதற்குமேல் ஒன்றும் சொல்லவில்லை. ரவீந்திரரும் அகமதும் ஒரு பெருமூச்சு விட்டு வெளியே வந்தார்கள்.

பெரியவரான பிறகும் ரவீந்திரருக்கு அகமதின்மேல் இருந்த அன்பு குறையவே இல்லை. குழந்தை குட்டி இல்லாத அவனுக்கு இடங்கொடுத்து அவன் மனதிற்கு எந்த விதக் குறையும் இராதபடி ரவீந்திரர் அவனை இறுதிவரையில் கவனித்துக் கொண்டார்.



## உ. யந்திரமும் ரவீந்திரரும்

சிறு வயதில் ரவீந்திரர் தம் தமையனர் ஜோதிபாபுவோடு சில நாள் சிலாயிதஹ் என்ற ஊரில் வசித்தார். அங்கே பங்களாவில் பல நிறப் பூக்கள் கிடைக்கும். தோட்டக்காரன் அவைகளைப் பறித்துப் பூக்கிண்ணங்களில் அலங்காரமாக வைப்பான். அந்தப் பூக்களின் ரசத்தைப் பிழிந்து அதில் பேனவைத் தோய்த் துக் கவிதை எழுத வேண்டும் என்று ரவீந் திரருக்கு என்னவோ ஒரு விசித்திர ஆசை உண்டாயிற்று. பூ இதழ்களை எவ்வளவு கசக்கிப் பிழிந்தும் பேனு முனைக்கு வேண்டிய ரசம் சொட்டுக்கூடக் கிடைக்கவில்லை. கடைசி யில் அவருக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. ஒரு மரக் கோப்பையை எங்கிருந்தோ தேடிப் பிடித்தார்; அதற்கு ஒரு குழவி வேண்டியிருந் தது. அதைச் சக்கரத்தில் மாட்டினுல் அது தானுகவே சுழல வேண்டும். அந்த யுக்தியை ஜோதி பாபுவிடம் சொன்னுர். தமையனர் இவரைவிடப் பல ஆண்டுகள் மூத்தவர் ; என் ருலும் வேடிக்கைப் பேர்வழி. தச்சனைக் கூப்பிட் டார். தம்பி சொன்னபடியே ஒரு யந்திரம் செய்து தரும்படிச் சொன்னுர். யந்திரம் உரு

வாயிற்று. அதன் உரலில் பூ இதழ்களைக் கொட்டி எவ்வளவு சுழற்றியும் ரசம் வந்தால் தானே? பூக்கள்தாம் குழைந்து கூழாயின. பூவுக்கும் யந்திரத்திற்கும் ஒத்து வராது என்பதை இப்போதுதான் தெரிந்துகொண்டார் ரவீந்திரர். அவர் தமையனுருக்கு இது முந்தியே தெரியும். இருந்தாலும், அவர் தம் தம்பியைச் சிறிதும் கேலி செய்யவில்லை.

வாழ்க்கையில் அந்த ஒரே தடவைதான் யந்திர வித்தையில் ரவீந்திரர் விருப்பம் காட்டினர். அதற்குப்பின் சங்கீதக் கருவிகளைத் தவிர வேறு எந்த யந்திரத்தின் வழிக்கும் அவர் போவதில்லை.



## 3. இளங் கவி

கல்கத்தாவில் எண்பது ஆண்டுகளுக்கு முன் பிரபல வங்க நூலாசிரியரான பங்கிம் சந்திரரைப் பாராட்ட ஓர் இலக்கிய மன்றத்தார் ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் கலந்துகொள்ளப் பிரமுகர்களும், இளம் எழுத்தாளர்களும் வந்தார்கள்.

பாராட்டெல்லாம் முடிந்ததும் பங்கிம் சந்திரர் எழுந்து, சற்றுத் தொலேவில் ஒரு பக்கமாக ஒதுங்கி அமர்ந்திருந்த பதினுன்கு வயதுச் சிறுவன் ஒருவனே அணுகினுர். அவன் பின்னுக்கு ஒதுங்கிக் கொண்டான். பங்கிம் புன்சிரிப்புடன் அவனேத் தழுவிக்கொண்டு, தம் கழுத்திலிருந்த பூமாலேயை அவன் கழுத்தில் போட்டு, “இந்த இளங் கவி யார் தெரியுமா?” என்ருர், சபையோரைப் பார்த்து. அங்கிருந்த பலபேருக்கு அவனும் ஒரு கவிஞன் என்பது தெரியாது. எல்லோரும் பங்கிம் விளேயாட்டாகச் சொல்கிருர் என எண்ணினுர்கள். சிறுவன் நாணத்தினுல் முகம் சிவக்கத் தலே குனிந்தபடி நின்ருன். பங்கிம், “பிரபாத சங்கீதம் எழுதின கவி ரவி இவன்தான்” என்ருர். எல்லோரும்

திகைத்துவிட்டார்கள். பிறகு எல்லோரும் ரவீந்திர கவியை வாழ்த்தினார்கள்.

இளமையிலிருந்தே இயற்கைச் சூழ்நிலையில் வளர்ந்த ரவீந்திரர், நுண்கலையில தேர்ந்த சகோதரர்களோடு பழகிப் பழகித் தாமும் இயல்பாகவே கவிபாடும் வல்லமை பெற்றார். தம் தந்தையான தேவேந்திர நாதருடன் இமாலயச் சாரலிலும் இன்னும் பல இடங்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்து வருவார். அப்போது தேவேந்திரர் மகாகவி காளிதாசனுடைய 'குமாரசம்பவம்' முதலிய காவியங்களை இவரைப் படிக்கச்சொல்லிக் கேட்டு வருவாராம். இப்படி ரவீந்திரரின் வாழ்வே கவிதைச் சுவை நிரம்பி விளங்கியது. பிறகு, அவர் குழந்தைகளுக்காக ஒரு சிறு பத்திரிகை நடத்த ஆரம்பித்தார். அதில் சின்னஞ் சிறு கதைகளும், கவிதையும் எழுதிப் பதினான்காம் வயதிற்குள் நல்ல பெயர் எடுத்துவிட்டார்.



310

## 4. துறவியின் நட்பு

ரவீந்திரருக்கு அப்போது வயது முப்பது இருக்கும். குடும்பத்தோடு தம் கிராமத்தில் ஜமீன் காரியங்களைக் கவனித்து வந்தார்; ஓய்வு நேரத்தில் கவிதைகள் எழுதுவார். அந்தப் பக்கத்தில் லாலன சாமி என்று ஒரு துறவி இருந்தார். அவர் ஒரு சமயம் ரவீந்திரரைக் காண வந்தார். அப்போது ஜமீன் குடிகள் அங்கே கும்பலாகக் கூடி யிருக்கவே துறவியினால் உள்ளே போக முடியவில்லை; தூரத்தில் இருந்தபடியே ரவீந்திரரைப் பார்த்துவிட்டுப் போய் விட்டார். முன் கண்டிராததால் ரவீந்திரரும் அவர் வந்ததைச் சரியாகக் கவனிக்கவில்லை.

அன்று நடுப்பகல்; குளித்துவிட்டு வர உள்ளே போனார் ரவீந்திரர். அப்போது அவருடைய மூத்தமகள், பாம்புத் தலைபோல் பிடி போட்ட பழைய தடி ஒன்றைக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தாள் ; அதைப் பார்க்கப் பார்க்க அவருக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. அந்தமாதிரி உறுதியான தடியை ரவீந்திரர் அதுவரையில் பார்த்ததே இல்லை. வேலையாளை அழைத்து விசாரித்தார்.

“இது லாலன சாமியின் தடி” என்ருன் அவன். அவரைப்பற்றி ரவீந்திரர் முன்னமே கேள்விப்பட்டிருந்தார்; அன்று காலே யாரோ ஒரு கிழவர் தூரத்தில் நின்று கொண்டிருந்தது உடனே ரவீந்திரருக்கு நினைவு வந்தது. மறு நாள் ஆளேவிட்டு அவரை அழைத்து வரச் சொன்னுர்.

தேவமுனி நாரதரைப் போல் சடைமுடி யுடன் வெளுத்த தாடிமீசையோடு லாலனசாமி ஒற்றைத் தந்தித் தம்பூராவும் கையுமாக அங்கே வந்து சேர்ந்தார்; அதை மீட்டிக்கொண்டே பரம்பொருளின் மேல் உருக்கமாக ஒரு பாடல் பாடினுர். அதைக் கேட்டு மெய்ம்மறந்து தியா னத்தில் ஈடுபட்டார் ரவீந்திரர். அன்று ஜமீன் காரியமே நடக்கவில்லே. துறவியும் கவியும் பொழுது போவதே தெரியாமல் பேசிக்கொண் டிருந்தார்கள். இருவருக்கும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிய மனமே வரவில்லே. அதுமுதல் வரும்போதெல்லாம் ரவீந்திரர், லாலன சாமியைக் காணத் தவறுவதில்லே.

லாலன சாமி சாதிமத வேற்றுமை பாராத ‘பாவுல்’ என்ற வேதாந்திகள் கூட்டத்தைச் சேர்ந்தவர். அவருக்கு இந்து சீடர்களும்

உண்டு ; முஸ்லிம் சீடர்களும் உண்டு. ஊரார் இவர்களை ஒதுக்கி வைத்தாலும், ரவீந்திரர் இவர்களோடெல்லாம் பழகினர்; இவருடைய ஆசிரமத்துக்காக நிலங்கூட இனமாகக் கொடுத்து உதவினர்; லாலனசாமி 116 வயது வாழ்ந்தார்; கோராயி ஆற்றங்கரையில் இன்றும் இவர் சமாதியைக் காணலாம். இவரோடு பழகத் தொடங்கியதுமுதல் ரவீந்திரரின் கவிதையில் பெரிய மாறுதல் ஏற்பட்டது; அதில் தெய்வீக மணம் வீசலாயிற்று.



## 5. கவிதையும் மனித இயல்பும்

ரவீந்திரர் சிலாயிதஹ் என்ற ஊரில் ஜமீன் காரியங்களைக்கவனித்துவந்தசமயம். அப்போது அங்கே ஒரு மௌலானு அவருக்குப் பழக்க மானுர். இந்த மௌலானு உள்ளூரைச் சேர்ந்த முஸ்லிம் அல்ல; பஞ்சாபுக்காரர். அரபி, பாரசீக மொழிகளில் இவருக்கு நல்ல தேர்ச்சி உண்டு. சாதாரணமாக இந்துஸ்தானியிலோ, உர்தூ மொழியிலோதான் பேசுவார். ஆள் பார்க்க அழகாகவும் கம்பீரமாகவும் இருப்பார். ரவீந்திர ரும் இவரும் இலக்கிய சம்பந்தமாக அடிக்கடி கலந்து பேசுவார்கள். ஜமீன் அபிவிருத்திக் கான சில யோசனைகளையும் இவர் அடிக்கடி ரவீந்திரருக்குச் சொல்லுவார். ஜமீன் குடியான வர்கள்பெரும்பாலும் முஸ்லிம்கள். அவர்களுக்கு மௌலானுவிடம் மிகவும் பக்தியும் மதிப்பும் உண்டு. அதனுல் குத்தகைப் பாக்கியை வசூலிக் கும்போது தாம் கூட இருந்து துணை புரிவதாக ரவீந்திரரிடம் அவர் சொன்னுர். கவிக்கும் இது சரி என்றே பட்டதால், இதற்குச் சம்மதித்தார். இதனுல் நாளடைவில் மௌலானுவுக்கு அந்த ஜமீனில் நல்ல செல்வாக்கு ஏற்பட்டது.

ரவீந்திரர் தம் தந்தையின் நினைவாக ஜமீனில் ஓர் இலவச வைத்தியசாலை வைத்திருந்தார். அதில் கோசால் கவிராஜர் என்ற ஒரு வைத்தியர் இருந்தார். ஒரு நாள் இரவு மௌலானுவின் மனைவிக்குக் கடுமையான காய்ச்சல். ஒரு கடிதம் எழுதி, அதை ஆள்மூலம் வைத்தியருக்கு அனுப்பி, கூடவே அவரை அழைத்து வரும்படிச்சொன்னார். ஆனால்அன்று வைத்தியருக்கும் உடம்பு சரியாக இல்லை. இந்த இரவு நேரத்தில், அதுவும் ஒருமைல் தொலைவு நடப்பதென்றால், அவரால் முடியவில்லை. மௌலானுவின் கடிதத்தில் கண்டிருந்த விவரத்தைக் கொண்டு நோயை ஊகித்து, அதற்கேற்ற மருந்தை ஆள்மூலம் கொடுத்தனுப்பினார். அதை உட்கொண்டதும், மௌலானுவின் மனைவிக்கு உடம்பு குணமாகிவிட்டது. மௌலானு நல்ல அறிவாளிதான்; என்றாலும், அவருக்கு அகந்தை மிகுதியாக உண்டு. வைத்தியர் நேரில் வந்து கவனிக்காததால், 'நம்மை இந்த வைத்தியப் பயல் மதிக்கவில்லை, பார்! இவனைச் சரியானபடி மட்டம் தட்ட வேண்டும்' என்று கருவிக்கொண்டிருந்தார்.

மறு நாள் ரவீந்திரரை மௌலானு காணப் போனார். கொஞ்ச நேரம் பல

சேதிகளைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தார். பிறகு பேச்சோடு பேச்சாக, "ஜமீனில் வீண் செலவு ஏராளமாக ஆகிறதே! அதை நீங்கள் கவனிக்கக்கூடாதா? ஓர் உதாரணம் சொல்லு கிறேன், கேளுங்கள். அந்தக் கோசால் கவிராஜர் இருக்கிறாரே, அவர் பகல் முழுதும் தூங்கத்தான் தூங்குகிறார். அவருக்கு அப்போது ஒரு வேலை யும் இல்லை. ஜமீன் கச்சேரியில் அனுப்பி வைத்தாலாவது ஏதாவது கணக்கு வழக்கைப் பார்ப்பார்" என்று ஜமீனின் நன்மைக்காகச் சொல்லுவதுபோல் சொல்லி வைத்தார்.

ரவீந்திரரும் வேறு நினைவாக, "சரி; கவனிக்கிறேன்" என்றார். பிறகு அவரிடம் மௌலானா விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்தார். வந்தவர் நேராக ஜமீன் காரியஸ்தரி டம் போய், "நம் ஐயாவுக்கு அந்தக் கோசால் வைத்தியனைக் கண்டால் கட்டோடு பிடிக்க வில்லை. அவனைப் பகலில் இரண்டு மணி நேரம் இங்கே வந்து வேலை செய்யச் சொல்லி உத்தரவு போட்டிருக்கிறார்" என்றார்.

காரியஸ்தருக்கு முதலில் ஒன்றும் புரிய வில்லை; "எனக்கு அப்படி ஒன்றும் உத்தரவு வரவில்லையே?" என்றார்.

மௌலானு சிரித்துக்கொண்டே "வரு கிறது, பாருங்களேன்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். காரியஸ்தர் பல ஆண்டுகளாகப் பல மனிதர்களோடு பழகி அநுபவப்பட்டவர். அதனுல் உடனே வைத்தியரை அழைத்து நடந்ததை விசாரித்தார். அவரும் அதைச் சொன்னுர். அதே சமயம், "பாபு உங்களைக் கூப்பிடுகிறுர்" என்று ஓர் ஆள் வந்து சொல்லவே காரியஸ்தர் ரவீந்திரரிடம் போனுர். ரவீந்திரர், "சரி, மௌலானுவுக்கும் நம் வைத்தியருக்கும் ஏதாவது மனத்தாங்கலோ?" என்று கேட்டார்.

காரியஸ்தர் தாம் கேட்ட விவரத்தை அப்படியே சொல்லிவிட்டார். ரவீந்திரர், "ஒகோ! சேதி அவ்வளவு தூரத்தில் இருக்கிறதா? ஏதோ படித்த மனிதர் என்று பார்த்தேன். சரி, சரி" என்று சொல்லி காரியஸ்தரை அனுப்பிவிட்டார். ரவீந்திரர் கவியாக இருந்தாலும், கற்பனையிலேயே திளைத்துக்கொண்டிருப்பவர் அல்ல; உலக இயல்பும் தெரிந்தவர். மறுநாள் கவியை மௌலானு காண வந்தபோது கவியின் அறைக் கதவு உட்பக்கம் தாழிட்டிருந்தது. இப்படியே நாலைந்து நாள் நடந்தது. மௌலானு நிலைமையை உணர்ந்தார். பின்பு அவர் பிறர் விவகாரத்தில் தலையிடுவதில்லை.

## 6. பலாப் பழத்தால் விளைந்தது!

ஒரு தரம் ரவீந்திரர் குடும்பத்தோடு தம் ஜமீனுக்கு வந்திருந்தார். படிகன் என்பவன் அவர்கள் சமையற்காரன். அவனுக்கும் அது சொந்த ஊர். வெகு நாளாக அவர்களிடம் வேலை பார்ப்பவன். அங்கே பலாப் பழம் மிகுதி. அதிலும் கதம்பன் என்ற தோட்டக் காரனுடைய பலாப் பழத்தின் சுவையே தனியாயிருக்கும். இவனைப் 'பலாப் பழக் கதம் பன்' என்றுதான் எல்லோரும் அழைப்பார்கள். இவனிடம் போய் நல்ல பழமாக ஒன்று வாங்கி வரச் சொன்னார் ரவீந்திரரின் மனைவி மிருணாளினி. அப்படியே படிகன் ஒரு பழம் வாங்கி வந்தான். ரவீந்திரருக்குப் பலாப் பழம் என்றால் அவ்வளவாகப் பிடிக்காது. ஆனால் இந்தப் பழத்தின் சுளை மிகவும் இனிப்பாக இருக்கவே, தாமே கேட்டு எழெட்டுச் சுளை வாங்கி உண்டார்; அதுமுதல் நாள் தோறும் உண்ணக் கீழே வரும்போது, "என்ன, இன்றைக்குப் பலாப் பழம் இல்லையா?" என்று கேட்கத் தொடங்கினார். அதனால் மிருணாளினி, "நாங்கள் இங்கே இருக்கிறமட்டும் தினமும் ஒரு பலாப் பழம்

வாங்கிக்கொண்டு வா. ஒரு பழத்துக்கு நாலணு வீதம் கொடுத்து விடு" என்று படிக னுக்கு உத்தரவு போட்டுவிட்டாள். ரவீந்திர ரின் குடும்பத்தில் அந்தத் தோட்டக்காரனை யாரும் பார்த்திராவிட்டாலும், 'பலாப் பழக் கதம்பன்' பெயர் மட்டும் அங்கே அடிபடத் தொடங்கியது.

கதம்பன், "எசமானிடம் துட்டு வாங்கு வேணு?" என்று இலவசமாகவே பழத்தைக் கொடுத்து வந்தான். படிகன் தந்திரசாலி ; அவன் மட்டும் வழக்கம்போல் எசமானி அம்மா ளிடம் கையெழுத்து வாங்கிக் கொள்வான். ஜமீன் காரியஸ்தரிடம் அதைக் காட்டித் தினந் தோறும் நாலணு வாங்கி ஜேபியில் போட்டுக் கொண்டு விடுவான்.

திடீரென்று படிகனுக்கு உடல் நலம் கெட்டது. அவனுக்குப் பதிலாக வேருெரு சமையற்காரனைச் சில நாளைக்கு அமர்த்தினுர் கள். வந்தவனுக்கு, முந்தி நடந்தது தெரியாது. அவன் மிருணுளினியின் கையெழுத்துப் போட்ட சீட்டைக் காட்டிப் பணம் வாங்கினுன். அதைக் கதம்பனிடம் கொண்டு வந்து கொடுத்துப் பழம் வாங்கப் போனுன்.

"என்ன பழத்துக்கு விலையா? ஐயாவும் அம்மாளும் குழந்தைகளும் சாப்பிட நான் கொடுத்துவைக்க வேண்டுமே" என்று சொல்லி அதை வாங்க மறுத்துவிட்டான் கதம்பன். அப்போதுதான் புதிய சமையற்காரனுக்கு நடந்தது இன்னதெனப் புரிந்தது. அவன் கள்ளங் கபடு இல்லாதவன். "நாம் இருக்கப் போவது சில நாள்தான் என்றாலும்,அதற்காகப் பெயரைக் கெடுத்துக் கொள்வானேன்?" என்று எண்ணி நடந்ததை எசமானியிடம் சொல்லி விட்டான்.

மிருணாளினிக்கு ஒரே கோபம். படிகன் இப்படி ஓர் ஏழையை ஏமாற்றிப் பணம் பறித்தது அவளுக்குப் பொறுக்கவில்லை. உடனே ஆளை அனுப்பிக் கதம்பன், படிகன் இரண்டு பேரையும் வரச் சொன்னாள். இந்தக் கூச்சலைக் கேட்டு ரவீந்திரர், என்னவோ, ஏதோ என ஓடி வந்தார். கதம்பன் அப்போது அங்கே வந்து சேர்ந்தான். நடந்தது தெரிந்ததும் ரவீந்திரர், "நீயா அப்பா, பலாப் பழக் கதம்பன்?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார்

அவன் பல்லை இளித்து, "ஆமாம்" என்றான்.

"உன்னையா படிகன் ஏமாற்றினன்? அவன் வரட்டும்; சொல்லுகிறேன்" என்று ரவீந்திரர் கோபத்தோடு பல்லைக் கடித்தார்.

படிகனும் அதேசமயம் வந்து தலைகுனிந்த படி நின்றான். மிருணாளினி தேவி, "நானும் வெகு நாளாகக் கவனித்துக்கொண்டு வரு கிறேன். கறிகாய் வாங்கிக்கொண்டு வருகிற போது இவன் இப்படித்தான் செய்கிறான்; நாலுபேரைக்கேட்டதிலே ஒரணாக் காய்கறிக்கு இவன் நாலணா நம்மிடம் வாங்கிவிடுகிறான் என்று தெரிந்தது; இவன் சம்பளத்தில் பத்து ரூபாய் கழியுங்கள்" என்று கத்தினாள்.

ரவீந்திரர், "இனி என் கண் முன்னே நிற்காதே! போ!" என்று சீறி விழுந்தார். படிகன் பேசாமல் நழுவி விட்டான்.

எவ்வளவு சொல்லியும் கதம்பன், பழத்துக் குப் பணம் வாங்கிக்கொள்ள மறுத்துவிட்டான். "எசமானருக்குக் காணிக்கையாகச் செலுத்தி னேன். எசமான் ஒன்றுமட்டும் செய்தால் போதும். எல்லோருமே என்னைப் 'பலாப் பழக் கதம்பன்' என்கிறார்கள். பத்திரங்களில்கூட அப்படித்தான் எழுதுகிறார்கள். இனிமேல்

'கதம்ப விசுவாசன்' என்று போடச் சொல்லுங்கள், சாமி" என்ருன்.

ரவீந்திரர் சிரித்துவிட்டு, "இதுதானே, பிரமாதம்! அப்படியே உத்தரவு போடுகிறேன். ஆனல் இனிமேல் இலவசமாகப் பழம் வாங்கிக் கொள்ளமாட்டேன்; ஜாக்கிரதை! அவ்வப்போது பணத்தை வாங்கிக்கொண்டு விடவேண்டும்" என்று சொல்லி அவனை அனுப்பினர்.

அன்றிரவு யாரும் இராத சமயம் படிகன் அவருடைய அறையில் நுழைந்து அவர் காலில் விழுந்து அழுதான். ரவீந்திரருக்கு எப்போதுமே இளகின மனசு. பழைய வேலைக்காரரிடத்தில் அவருக்குப் பாசம் வேறு. அதனல் மிருணளினியின் உத்தரவு நிறைவேருதபடி பார்த்துக் கொண்டார். படிகனும் அதுமுதல் தவருன வழியில் பணம் சம்பாதிப்பதை நிறுத்தி விட்டான்.

★

## 7. அடைப்பட்டுக் கிடந்த துக்கம்

ரவீந்திருக்கு நாற்பது வயது இருக்கும். அவர் வாழ்விலேயே மிகப் பெரிய அதிர்ச்சி அப்போதுதான் நேர்ந்தது. ஏழு எட்டு மாத மாக ஏதோ கெடுதல் நேரும் என்று அவருக் குத் தோன்றி வந்தது. கடைசியில் அவர் அருமை மனைவி மிருணாளினி, கைக்குழந்தை சமீந்திரனை விட்டுவிட்டு இறந்து போனாள்.

அன்று முதல் ரவீந்திரர் யாரோடும் அதிகமாகப் பேசுவதில்லை. இரவும் பகலும் வீட்டு மேல் மாடியில் உலாவிக்கொண்டே இருப்பார். அவருடைய கண்கள் வறண்டு வெறிச்சென்றிருந்தன. தந்தை தேவேந் திரநாதர் அப்போது உயிரோடு இருந்தார். இவருக்குத் தம் கடைசி மகன் ரவியின்மேல் அதிக அன்பு. "ரவி இப்படி இன்னும் சிலநாள் இருந்தானானால் அவனுக்கு ஆபத்தாய் முடியும்" என்று தந்தைக்குப் பட்டது. ரவீந் திரரை எப்படித் தேற்றுவது?

அப்போது நடுநிசி. மேலே ரவீந்திரர் உலாவும் காலடிச் சத்தம் இன்னும் கேட்டுக்

கொண்டிருந்தது. தந்தைக்குச் சட்டென்று ஒரு யோசனை உதித்தது. மெல்ல எழுந்தார். பெண்கள் இருக்கும் பின் கட்டில் குழந்தை சமீந்திரன் தூங்கிக் கொண்டிருந்தான். அவனை அப்படியே கையில் எடுத்துக்கொண்டு மேல் மாடிக்கு வந்தார். ஒன்றும் பேசாமல் மகன் கையில் குழந்தையைக் கொடுத்தார்.

ரவீந்திரர் குழந்தையைக் கையில் வாங்கிக் கொண்டதும் அதுவரையில் தடைப்பட்டிருந்த கண்ணீர், வெள்ளம்போல் வந்தது. தந்தையும் இவரோடு சேர்ந்து கண்ணீர் பெருக்கினர். பிறகுதான் தந்தையின் மனத்தில் இருந்த பாரம் நீங்கியது ; 'இனிமேல் ரவிக்கு ஆபத்தில்லை!' என்று பெருமூச்சு விட்டார்.

அதுமுதல் ரவீந்திரர் குழந்தைகளிடம் மிகுந்த அன்பும் கடவுளிடம் நீங்காத பக்தியும் கொண்டார். அந்தச் சமயத்தில்தான் அவர் குழந்தைகளுக்காகச் 'சிசு' என்ற கவிதைகளையும், இன்று உலகப் பிரசித்தி பெற்று விளங்கும் 'கீதாஞ்சலி' என்ற தெய்விகப் பாசுரங்களையும் வங்க மொழியில் இயற்றினர்.

★

## 8. இஷ்ட தெய்வம்

ரவீந்திரரின் வாழ்க்கையில் எத்தனையோ நிகழ்ச்சிகள் நேர்ந்திருக்கின்றன. அவை சாதாரணமோ, அசாமானியமோ எப்படி இருப்பினும் சரி, தம் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் இஷ்ட தெய்வமே அவைகளை நடத்தி வைப்பதாக அவர் அடிக்கடிச் சொல்லுவார். இதையே அவர் தம் 'ஜீவன தேவதை' என்று பல கவிதைகளில் குறிப்பிட்டிருக்கிறார். முன்னால் ஓர் ஏற்பாடு செய்துவிட்டுத் திடீர் என்று அதை மாற்றிவிடுவது அவர் வழக்கம். அவருக்கு ஏன் இப்படி மாற்றுகிறோம் என்று தான் முதலில் தோன்றுமாம். ஆனால் பின்னால் நடக்கும் நிகழ்ச்சியிலிருந்து அப்படி மாற்றினது நல்லதுதான் என்று தெரியுமாம்.

ரவீந்திரருக்கு 50 வயது நிரம்பியதும், ஒரு சமயம் வெளிநாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்வதென்று தீர்மானித்தார். கல்கத்தாவில் விடியற்காலை ஸ்டீமரில் ஏறிப் புறப் படுவதாக இருந்தார். இதனால் அதற்கு முந்திய நாளே அவருடைய நண்பர்கள் அநேகம் பேர் அவரைப் பார்த்து விடை பெற்றுக்

கொள்ள வந்தார்கள்; கடைசியாக மிகவும் நெருங்கிய இளநண்பர் ஒருவர் அவர் காலைத் தொட்டு வணங்கினார். அப்போது ரவீந்திரர், “இப்போதுஇருக்கிற ஏற்பாட்டின்படி நாளைக்கு எழுந்தவுடனே கப்பலடிக்குப் போக வேண்டியதுதான். ஆனால்......” என்று சொல்லி அதோடு பேச்சை நிறுத்திவிட்டார். அவர் பேசுகிற ரீதியே நண்பருக்கு என்னவோபோல் இருந்தது; ‘ஏன் இப்படிச் சொல்கிறார்? ஒருவேளை நாளைக்குப் புறப்பட மாட்டாரோ,’ என்று எண்ணினார். இருந்தாலும் மறுநாள் விடியற்காலை ரவீந்திரர் புறப்படுவதற்கு முன் அவரை ஒருதரம் போய்ப் பார்ப்பது என்று நண்பர் தீர்மானித்தார். அதேமாதிரிப் போய்ப் பார்த்தால், உண்மையாகவே ரவீந்திரர் புறப்படவில்லை என்று தெரிந்தது. அவருக்கு உடம்பு சரியாக இல்லை. வெளிநாட்டுப் பிரயாணம் நின்றுவிட்டது. அப்படி அதிகக் காய்ச்சல் இல்லாவிட்டாலும் அவரைப் பார்த்தால் மிகவும் ஓய்ந்துபோன மாதிரி இருந்தது. கல்கத்தாவைவிட்டு எங்காவது நாட்டுப் புறமாகச் சில நாள் போய் ஓய்வு எடுத்துக்கொள்வது என்று ரவீந்திரர் முடிவு செய்தார். அப்போதுதான் தம்முடைய வங்கா

ளிக் கவிதைகள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். இந்த மொழிபெயர்ப்பே ஆங்கிலத்தில் 'கீதாஞ்சலி' என்ற பெயரில் பின்னல் வெளியாயிற்று. பிறகு ரவீந்திரர் இங்கிலாந்து சென்றுர். அப்போது டபிள்யூ. பீ. ஈட்ஸ் என்ற பிரபல நூலாசிரியர் அந்த மொழி பெயர்ப்பைப் படித்து, "அபாரம்! நோபெல் இலக்கியப் பரிசுக்குத் தகுதியானது" என்று பாராட்டினுர். அப்படியே 1913-இல் ரவீந்திரருக்கு அந்தப்பரிசு கிடைத்தது. "முதல் முறைவெளிநாட்டுப் பிரயாணம் தடைப்பட்டது நல்லதாயிற்று! அந்தக் கவிதைகளே மொழி பெயர்க்க இப்படி ஒரு சந்தர்ப்பம் கிட்டியதே" என்று எல்லோருக்குமே பட்டது. ரவீந்திரருக்கும் தம் 'ஜீவன தேவதையே' இதற்கெல்லாம் காரணம் என்று உள்ளூற நம்பிக்கை.



## 9. கடமையே பெரிது

அந்த வருஷம் வங்க இலக்கிய மகாநாடு டாக்காவில் கூடுவதாக ஏற்பாடாகி யிருந்தது. ரவீந்திரரை அதற்குத் தலைவராகப் போட்டிருந் தார்கள். அப்போது அவர் தம் சொந்தக் கிராமத்தில் தங்கியிருந்தார். கூட ஒரே ஓர் இந்துஸ்தானி வேலையாள் மட்டுமே இருந் தான். மகாநாட்டுக்கு முந்திய நாள் அவருடைய நண்பர் ஒருவர் வந்து அவரை அழைத்துப் போவதாகச் சொல்லியிருந்தார்.

திடீரென்று அன்று காலை, "அசந்தர்ப்பம்; புறப்படுவதற்கில்லை-ரவி" என்று அந்த நண் பருக்குத் தந்தி கிடைத்தது; ஒன்றும் புரியாமல் நண்பர், 'எதற்கும் நேரில் போய்ப் பார்ப்பது என்று தீர்மானித்தார்.

கிராமத்தில் அன்று மாலை நுழைந்தபோது எங்கும் வெறிச்சென்றிருந்தது. நடுநடுவே ஆட்கள் சிலர் சந்தடி செய்யாமல் பிணங்களைத் தூக்கிக்கொண்டு போகும் காட்சி கண்ணில் பட்டது. ஊரெங்கும் காலரா. நண்பருக்கு வயிற்றில் பகீர் என்றது. ரவீந்திரரின் மாளி

கையில் நுழைந்ததும், நண்பரை மௌனமாக அவர் வரவேற்றார். மேல்மாடியில் நண்பரை அழைத்துக்கொண்டு போய் அமைதியாக, "கீழே என் வேலையாளுக்குக் காலரா கண்டிருக்கிறது. அதுதான் அசந்தர்ப்பம் என்று தந்தி அடித்தேன்" என்றார்.

நண்பரின் கைகால் எல்லாம் பயத்தினால் சில்லிட்டு விட்டன. இருந்தாலும் அதைக் காட்டிக்கொள்ளவில்லை. அவருடைய உணவுக்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் ரவீந்திரர் செய்தார். நண்பருக்கு இருந்த கிலியில் அவர் கீழே இறங்கினால்தானே? வேலையாளைக் கவனிக்க ரவீந்திரர் கீழே போய்விட்டார். அன்று இரவு வெகுநேரம் நண்பர் தூங்கவேயில்லை. ஆனால் பின்னிரவில் தம்மையும் மீறிக் கண்ணயர்ந்து விட்டார்.

விடியற்காலை, நண்பர் கண்விழித்தபோது ரவீந்திரர் இனிமையான குரலில் உதயகீதம் பாடிக்கொண்டிருந்தார். நண்பருக்கு, முந்திய இரவு நினைவு வந்துவிட்டது.இவருடைய மனப்போக்கை ரவீந்திரர் ஊகித்தறிந்தார். "ஆள் தேறிவிட்டான். இருந்தாலும், பலவீனமாக இருக்கிறான். அவனைத் தனியே விட்டுவிட்டு எப்படி வருவது? நான் இல்லாமல் மகாநாட்டை

நடத்தலாம். வேறு யாரையாவது தலைவராகப் போட்டு விடுங்கள். எனக்காகக் காத்திருக்க வேண்டாம்" என்று புன்னகையோடு சொன்னார்.

சாவுக்கும் அஞ்சாத அவருடைய துணிவையும் கடமை உணர்ச்சியையும் கண்டு நண்பர் வியந்தார்; அதோடு தம் கோழைத்தனத்தையும் எண்ணி வெட்கித் தலை குனிந்தார்.

அந்தத் தடவை இலக்கிய மகாநாட்டை ஒத்திப் போட்டுவிட்டார்கள். பின்னால் ஒரு மாதங் கழித்து அது ரவீந்திரரின் தலைமையிலேயே கூடியது.



## 10. சேற்றில் சிக்கிய படகு

ரவீந்திரர் பத்மா ஆற்றில் தம் சொந்தப் படகில் சென்றுகொண்டே சுற்றிலும் உள்ள இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிப்பார். அப்போதுதான் அவருக்குக் கவிதை எழுத உற்சாகம் பிறக்கும். இப்படி ஒரு சமயம் ஐந் தாறு நாட்கள் ஓர் அழகான குக்கிராமத்தின் அருகில் தங்கியிருந்தார். ஆற்றில் நீர் வற்றும் சமயம். நாலு நாளில் நீர்மட்டம் முழங்கால் அளவுக்கு வந்துவிட்டது; படகு சேற்றில் புதைந்துவிட்டது. மறுநாள் அவர் கல்கத்தா வுக்குப் புறப்பட்டாக வேண்டும். அங்கே முக்கியமான அலுவல் இருந்தது. ஆனால் இந் தச் சமயம் படகைச் சேற்றிலிருந்து இழுத்தால் அதன் கீல் முறிந்துவிடக்கூடும். ரவீந்திரரோ படகின் அறை ஒன்றில் வேறு எந்த நினைவும் இல்லாமல் கவிதை எழுதிக்கொண்டிருந்தார்.

படகோட்டிகள் இப்படி நேரும் என்று முன் னாலேயே சொல்லியிருந்தார்கள். அப்போது அவர் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

படகை இழுத்து விடாவிட்டால் ஜமீன் காரியஸ்தர் கோபித்துக்கொள்வார். எசமான்

கட்டளேயையும் மீற முடியாது. இப்படிக் கவலே யோடு அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். அதே சமயம் தற்செயலாக ரவீந்திரர் கரைப் பக்கம் கவனித்தார். அவர்கள் பேசுவது அவர் காதில் விழுந்தது. உடனே படகிலிருந்து இறங்கினுர். கழியை விட்டுத் தாமே ஆழம் பார்த்தார். அவர்கள் சொல்வது உண்மைதான் என்று அவருக்கும் பட்டது.

அப்போது அந்த வழியாக இரண்டு முஸ்லிம் குடியானவர்கள் வந்தார்கள். அவர்களில் மோர்ஜான் என்பவன் அவனுக்குப் பழக்கமானவன். ரவீந்திரர் அடிக்கடி அவனே முஸ்லிம் சித்தர்களின் பாடல்கள் பாடச் சொல்லிக் கேட்பார். இதனுல் அவனுக்கு அவரிடத்தில் அதிக விசுவாசம். ரவீந்திரர் பல்லக்குக் கொண்டு வரும்படிக் காரியஸ்தருக்குச் சீட்டு எழுதி அனுப்பினுர்; அதோடு படகை ஆழத்தில் இழுத்து விடவும் ஆட்களே அனுப்பச் சொன்னுர். இதைக் கேட்டதும் மோர்ஜான் அவரை வணங்கி, பல்லக்கு வந்தால்கூட எப்படி சாமி போவது? வழி இல்லேயே! நீங்கள் சும்மா படகிலே இருங்கள்; காரியஸ்தரிடம் சொல்லி ஆட்களே வரவழைப்பதற்குள்ளே நேரம் ஆகிவிடும். அதோடு எங்

கள் ஊருக்கு வந்த விருந்தாளி நீங்கள். உங்களை மரியாதையாக வழி அனுப்பாவிட்டால் எங்களுக்குத்தானே அவமானம்? சற்றுப் பொறுங்கள்" என்று சொல்லிவிட்டு ஊருக்குள் போனான்.

பொழுது சாய்ந்துவிட்டது. அப்போது மேர்ஜானும், அவனோடு சுமார் ஐந்நூறு ஆட்களும் வாழைமரத் தண்டுகள், மூங்கில் கழிகள், கயிறு முதலிய சாமான்களை எடுத்துக்கொண்டு ஆற்றங்கரையோரம் வந்து சேர்ந்தார்கள். ரவீந்திரர் இந்தக்காட்சியைப்பார்த்து திகைத்து நின்றார். அவரைப் படகில் ஏறச் சொல்லி விட்டு அவர்கள் சேற்றில் வாழைமரத் தண்டுகளையும் மூங்கிலையும் பரப்பினார்கள். அதற்குள் சந்திரோதயம் ஆயிற்று. வந்தவர்களில் முஸ்லிம்களும் இருந்தார்கள்; ஹரிஜனங்களும் இருந்தார்கள். எல்லாரும் சேர்ந்து நிதானமாகப் படகை இழுக்கத் தொடங்கினார்கள். ஒரு பக்கம், "அல்லா ஹோ அக்பர்" என்ற கூச்சல் வானத்தைப் பிளந்தது. மற்றொரு பக்கம் ஹரி நாம கோஷம். அவர்களுக்கு ஒரே உற்சாகம். இப்படி மூன்று மைல் தூரம் இழுத்து வந்து ஆழத்தில் கொண்டுவிட்ட பிறகுதான், அவர்களுக்குத் திருப்தி ஏற்பட்டது. இதற்கு இரண்டு மணி நேரம் பிடித்தது.

## 11. மணலில் விளைந்த பொன்

ரவீந்திரருடைய ஜமீனில் ஏழைக் குடியானவர் பலர் இருந்தார்கள். ஆண்டுதோறும் நிலத்தைக் குத்தகைக்கு விடும்போது கையில் பணம் இருப்பவர்கள் பாடுதான் கொண்டாட்டம். இவர்கள் மொத்தமாக நல்ல நிலங்களை யெல்லாம் குத்தகை எடுத்துவிடுவார்கள். அதனுல் மற்றவர்கள் இவர்கள் தயையை எதிர்பார்த்துக் காலம் கழிக்க வேண்டியதுதான். மாது என்ற குடியானவன் நல்ல உழைப்பாளி. இருந்தாலும் ஏழை. அவன் ரவீந்திரரிடம் போய், "சிறு நிலமாக இருந்தாலும் பரவாயில்லை. நல்ல நிலமாக ஒன்று எனக்கு விடுங்கள்" என்ருன். அதற்கு முன்னுலேயே அந்த நிலங்களைக் குத்தகைக்கு விட்டுவிட்டதால் ரவீந்திரருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை; உள்ளூற வருத்தப்பட்டார். பிறகு, "அப்பா! நீ நல்ல உழைப்பாளி. வேண்டுமானுல், மணற்பாங்கான நிலம் இருபது காணி தருகிறேன். அதில் பூசனிபோட்டுப் பார்" என்ருர்.

அவன்முகம் சோர்ந்தது."அதிலே அப்படி என்ன கிடைத்துவிடப் போகிறது?" என்ருன்.

"அதில் பொன் விளைகிறதா, இல்லையா, வேண்டுமானால் பார்" என்றார் கவி.

மாது அரை மனத்தோடு அவருடைய யோசனைக்கு இணங்கினான்.

மூன்று மாதம் கழித்து ஒரு நாள், தலையில் ஒரு பெரிய பூசனிக்காயைத் தூக்கிக் கொண்டு, மாது அவரிடம் வந்தான்.

"உன் நிலத்தில் விளைந்ததா?" என்று கேட்டார் ரவீந்திரர்.

மகிழ்ச்சியோடு, "ஆமாம்; உங்கள் அருள் தான். இதை வாங்கிக்கொள்ளுங்கள். இப்போதே கைமேலே 25 ரூபாய் கிடைத்து விட்டது; நிறையப் பேர் வந்து வேறே காத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றான் மாது.

அவனுக்குப் பத்து ரூபாய் பரிசு கொடுக்க வந்தார் ரவீந்திரர். அவன் அதை வாங்க மறுத்து விட்டான். மிகவும் வற்புறுத்தி அதை அவனிடம் கொடுத்தார்.

பின்னால் அவன் தள்ளாத கிழவனாகி அவனுக்கு வீடுவாசல் எல்லாம் ஏற்பட்டன. அவன் குடும்பம் மிகச் செழிப்பான நிலையை அடைந்தது. ரவீந்திரர் சாந்திநிகேதனம் போன பிறகு அங்கே அதிகமாக வருவதில்லை. இருந்தாலும் கிழவன் அவரைப்பற்றி ஒரு நாளாவது கேட்காமல் இருப்பதில்லை.

## 12. மாப்பிள்ளை ஐயாவின் திண்டாட்டம்

மகாகவி ரவீந்திரர் இலக்கியப் பணியில் அதிகமாக ஈடுபட்டிருந்த காலம் அது. ஐரோப்பா, அமெரிக்கா, சீனம், ஜப்பான் முதலிய இடங்களில் சுற்றுப் பிரயாணம் செய்ய வேண்டியும் இருந்தது. ஆகையால் தம் ஜமீன் காரியங்களைக் கவனித்துக் கொள்ளப் பாரிஸ்டர் பிரமத் சௌதுரி (இன்று சிறந்த கதாசிரியர்) என்பவரை அமர்த்திவிட்டுப் போனார். பிரமத் பாபு கவியரசரின் தமையனார் மாப்பிள்ளை. இந்தச் சமயத்தில் எவரேனும் ஜமீன் அலுவலாகத் தம்மிடம் வந்தால் கவி, "மாப்பிள்ளை ஐயாவைக் கேட்டுக் கொள்ளுங்கள்" என்று சொல்லிவிடுவார்.

சிலாயிதஹ் ஜமீனில் சில நிலங்களைக் குடிகளுக்குக் குத்தகையாக விடுவது வழக்கம். சிலர் அவசரப்பட்டு அதிகத் தொகைக்கு ஏலம் எடுப்பார்கள். முதலில் சிறிது தொகை செலுத்தி, மீதியை அறுவடையானதும் கட்டலாம். எல்லா நிலமும் ஒரே மாதிரி இருக்குமா? சில பேர் வாசி நன்றாக விளையும்; சிலருக்கு

ஒன்றுமே கைக்குக் கிட்டாது. இப்படி நஷ்டப் பட்டவர்கள் ஜமீன்தார் கைகாலைப் பிடித்துக் கெஞ்சிக் குத்தகைப் பணத்தை வஜா செய் யும்படி வேண்டிக் கொள்வார்கள். இலாபம் அடித்தவர்கள் சில பேர்கூட இப்படி வந்து ஏமாற்றப் பார்ப்பார்கள். இவ்வளவு பெரிய ஜமீனில் இவைகளை யெல்லாம் கவனிப்ப தென்றால் இலேசான காரியமன்று. இத்தனை காலமாக ரவீந்திரரே இந்தப் பொறுப்பை ஏற்றுத் தண்டக் கணக்கு வழக்குகளைத் தீர்ப் பது வழக்கம். அதற்கு பின் 'புண்ணிய நாள்' கொண்டாடுவார்கள். அன்று ஜமீன்தாரும் குடி களும் கலந்து பழகுவார்கள்; விருந்து நடக்கும்.

இம்முறை புண்ணிய நாளுக்குப் பத்துப் பன்னிரண்டு நாட்களுக்கு முன் மாப்பிள்ளை ஐயா பெரிய பல்லக்கில் வந்து இறங்கினார். ஜமீன் மாளிகையில் மலைபோல் குவிந்து கிடந்த தஸ்தாவேஜுகளைப் பார்த்ததும் திகைத்து விட்டார். இவ்வளவு வேலை இருக்கும் என்று அவர் எண்ணவே இல்லை. ரவீந்திரரும் அதேசமயம் படகு வழியாக அங்கே வரப் போவதாகத் தந்தி கிடைத்தது. அவரை வரப் வேற்கத் துறையில் குடிகள் கூடிவிட்டார்கள். ஜமீன் மாளிகை வாயிலிலும் ஒரே கூட்டம்.

மாப்பிள்ளை ஐயாவுக்கோ ஒன்றுமே விளங்க வில்லை. இருந்தாலும், தஸ்தாவேஜுகளைப் பார்வையிடுவதில் ஈடுபடலானார். இன்னும் இரண்டு மூன்று நாட்கள் கழித்து அவர்கள் குறைகளைக் கவனிப்பதாகக் குடிகளுக்குத் தெரிவித்துவிட்டார்.

பிறகு ரவீந்திரர் வந்தார்; மேல் மாடியில் போய் அவர் நின்றதும் எல்லோரும் வணங்கினார்கள். அவரும், "மாப்பிள்ளை ஐயா எல்லாவற்றையும் சரியாகப் பார்த்துக் கொள்வார்" என்று சொல்லி அவர்களை அனுப்பிவிட்டார்.

மாப்பிள்ளை ஐயா ஒவ்வொருவரையும் வரவழைத்து அவர்கள் வாக்கு மூலத்தை வாங்கிக் கொண்டார். ஆனால் உத்தரவு பிறப்பிக்க வில்லை. மக்கள் வெளியேவந்ததும், "இதென்ன இப்படி ஒன்றும் சொல்லாமல் சும்மா அனுப்பிவிட்டாரே!" என்று பேசிக்கொள்ள லானார்கள். சில பேர் குத்தகைப் பண வஜா பற்றியும், சிலர் வேறு ஏதோ குறை சம்பந்த மாகவும், சிலர் முன்பே 'டிக்ரீ' ஆகிவிட்ட தொகையைப் பற்றியும் முறையிட்டுக் கொண் டார்கள். இதில் எதை, எப்படித் தீர்ப்பது என்பதுதான் சங்கடமாக இருந்தது. நடுக் கடலில் சிக்கியவன்போல் தத்தளித்தார் மாப்

பிள்ளை ஐயா! இந்தநிலையில் உத்தரவு எப்படிப் பிறப்பிக்க முடியும்?

சிறிய மாமனாரிடம் கேட்கலாம் என்று மேல் மாடிக்குப் போனாலோ, அவர் (கவி) இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார். அவர் வேறு ஏதோ நினைவாக இரண்டொரு வார்த்தை பேசினாரே தவிர, தெளிவாக ஒன்றும் சொல்லவில்லை. பிரமத் பாபுவுக்கு 'இவர் வேண்டுமென்றே நம்மை ஆட்டி வைத்து வேடிக்கை பார்க்கிறார்!' என்று தோற்றியது. ஜமீன் காரியஸ்தர், குமாஸ்தா முதலியவர்களுடன் கலந்து பேசிப் பார்த்தார். முன்னே ஒருதரம் கவியின் தந்தை இறந்தபோது அப்படித் தள்ளுபடி செய்திருக்கிற சங்கதி தெரிய வந்தது. அப்புறம் இந்தமாதிரிச் சிக்கல் எதுவும் ஏற்பட்டதில்லை. ஆகவே, ரவீந்திரரைக் கேட்டால்தான் எதுவும் தெரியும். ஆனால் அவரோ இவர் தலையில் இதைப் போட்டுவிட்டு நிம்மதியாக இருந்தார். பிரபல பாரிஸ்டர் பிரமத் பாபு இப்படித் திணறிக்கொண்டிருந்தார்!

புண்ணிய நாளுக்கு முன் நாள் மாலை ரவீந்திரர் ஆற்றங்கரை ஓரம் உலாவச் சென்றிருந்தார். அப்போது சில குடிகள் அவரைச் சூழ்ந்து

கொண்டார்கள். "என்ன செய்தி!" என்று கேட்டார். "நாங்கள் எங்கள் குறைகளைச் சொல்லியும் மாப்பிள்ளை ஐயா உத்தரவு கொடுக்காமல் சும்மா இருக்கிறார்" என்றார்கள். ரவீந்திரர் சிந்தையில் ஆழ்ந்தார். மனித இயல்பு அவருக்கு நன்றாகத் தெரியும். ஜமீன் உத்தியோகஸ்தர்களின் சங்கதியைக் கவனித்திருக்கிறார் அல்லவா? அந்தச் சுழலில் அகப்பட்டுக் கொண்டு மாப்பிள்ளை ஐயா அவதிப்படுகிறார் என்று அறிந்து கொண்டார். "நாளைக் காலை எல்லோருமே வாருங்கள். நானே இருந்து உங்கள் குறைகளைக் கவனிக்கச் சொல்கிறேன்" என்றார். அவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. இருந்தாலும், அவர் சொன்னபடி காலையில் வந்தார்கள்.

மறு நாள் காலை எழுந்துமே கவியரசர், பிரமத் பாபுவைக் கூப்பிட்டார்; "இன்னும் வஜா ஏன் செய்யவில்லை? ஏதாவது சிக்கல் இருக்கிறதா?" என்று கேட்டார். ஒரு வாரமாகத் தவித்துக்கொண் டிருந்த மாப்பிள்ளை ஐயாவுக்கு இப்போதுதான் கரை தென்பட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அவர் தஸ்தாவேஜுகளையும், வாக்குமூலங்களையும் கவியிடம் கொண்டுவந்து காட்டி விவரமாக

எல்லாவற்றையும் சொன்னார். பிறகு ரவீந்திரர் அமைதியாகவும் தெளிவாகவும், எப்படிச் செய் தால் ஜமீன்தாருக்கும் குடிகளுக்கும் திருப்தி ஏற்படுமோ, அந்த முறைகளை யெல்லாம் எடுத் துக் கூறினார். பிரமத் பாபுவுக்கு அப்போது தான் கவியரசரின் பரந்த அனுபவமும் திறமையும் தெரிந்தன. ஜமீன் காரியஸ்தரும் குமாஸ்தாக்களுங்கூட, "இன்னும் எவ்வளவோ பாபுவிடத்தில் நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது!" என்று அடக்கமாகச் சொன்னார்கள்.

குடிகள் கீழே காத்துக் கொண்டிருந்தார் கள். அப்போது ஓர் அதிசயம் நிகழ்ந்தது. கவியரசர் மேல்மாடியிலிருந்து இறங்கி வந்து குடிகளோடு ஒருவராக நின்று கொண்டார். அவர் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. கண் களில் குதூகலம் கூத்தாடியது. "எல்லாரும் மாப்பிள்ளை ஐயாவிடம் போங்கள்; இனிமேல் அவர் கவனிப்பார், பாருங்கள்! கவலைப்பட வேண்டாம். நானே முன்னே இருந்து ஒவ் வொருவர் குறையையும் தீர்த்து வைக்கும்படிச் செய்கிறேன்" என்று சொல்லிவிட்டுக் காவற் காரர்களை நோக்கி, "எவரையும் திட்டவோ அடிக்கவோ கூடாது; தெரிகிறதா? ஒவ்வொரு

வராக உள்ளே விடுங்கள்'' என்று உத்தர விட்டார்.

இப்போது மாப்பிள்ளை ஐயா மடமட் வென்று எல்லோர் பிராதையும் தீர்த்துக் கொண்டே போனர். கவி தாமே வாயிற்படி அருகில் நின்றுகொண்டு, "இப்போது நீ போ!" "அப்புறம் நீ'' என்று ஒவ்வொருவராக அனுப் பிக்கொண்டே வந்தார். எல்லோரும் அவரவர் கள் குறை தீர்ந்து, சிரித்த முகத்தோடு திரும்பி வந்தார்கள். மாப்பிள்ளை ஐயா ஜமீன்தா ராகவும், 'பெரிய ஐயா' குடிகளின் சார்பாக உழைக்கும் தனிப்பட்ட ஒருவராகவும் மாறிய அந்த அற்புதக் காட்சியை என்னவென்று விவரிப்பது !

அந்த முறை புண்ணிய நாளை எல்லோரும் வெகு உற்சாகமாகக் கொண்டாடினர்கள். இப்போதுகூடப் பழைய குடிகள் சிலர், இந்த நிகழ்ச்சியைப்பற்றிப் பேசி, ரவீந்திரருடைய மேலான குணத்தை எண்ணி வியப்பதுண்டு.



## 13. கொக்கு வேட்டை

ரவீந்திரர் மாலை வேளைகளில் தம் ஊர் ஆற்றங்கரையோரம் உலாவச் செல்வார். நீல வானத்தில் கொக்குக் கூட்டம் பறந்து வரும். இப்படி அவை அடிக்கடி ஆற்றின் நடுவில் கருமணல் திட்டுக்களில் வந்து இறங்கும் காட்சி அற்புதமாக இருக்கும். இதைக் கண்டு இன்புறுவார் ரவீந்திரர். ஒரு நாள் தொலைவில் "டுமீல், டுமீல்!" என்று துப்பாக்கி வெடிச்சத்தம் கேட்டது. அவரோடு கூடவே எப்போதும் ஓர் ஆள் வருவான். அவனை, "அதென்ன?" என்று அவர் கேட்டார். "யாரோ அடுத்த ஊர்த் தோப்பில் பறவை வேட்டை ஆடுகிறார்போல் இருக்கிறது" என்றான் அவன்.

"நம் ஜமீனில் இல்லையே...சரி, இங்கே யாரேனும் வந்து அப்படிச் சுடப் போகிறார்கள்; பார்த்துக்கொள்!" என்று எச்சரிக்கை செய்தார்.

இது நடந்து ஒரு வாரமாயிற்று. போலீஸ் அதிகாரி ஒருவர் அங்கே ஏதோ அலுவலாக வந்து முகாம் போட்டார். சர்க்கார் அதிகாரி யல்லவா ? அதனால் மக்கள் பய பக்தியோடு அவருக்கு மரியாதை செய்தார்கள். ரவீந்திர

ருக்கு இது தெரியாது. அன்று மாலை வழக்கம்போல் ஒரு படகில் உட்கார்ந்து கவிதை எழுதிக்கொண் டிருந்தார். திடீரென்று துப்பாக்கி வெடிச் சத்தம் மிகவும் அருகில் கேட்டது. ரவீந்திரரின் முகம் சிவந்தது. படகை விட்டு இறங்கினார். தம் ஆளைக் கூப்பிட்டார். "யார் சுடுகிறார்?" என்று கேட்டார்.

ஆள், "போலீஸ் இன்ஸ்பெக்டர்" என்று தயங்கிக்கொண்டே பதில் சொன்னான். ரவீந்திரரின் கண்ணிலிருந்து நெருப்புப் பொறி பறந்தது. "அவன் யாராக இருந்தாலும் சரி; நேராகப் போய் இப்படி அழைத்துக்கொண்டு வந்தாக வேண்டும்" என்று உத்தரவிட்டார்.

அதிகாரியிடத்தில் பயம் இருந்தாலும், எசமான் உத்தரவை மீறாதவன் அந்த ஆள். சற்று நேரத்துக்கெல்லாம்; தோப்பிலிருந்த போலீஸ் அதிகாரியோடு அவன் வந்து சேர்ந்தான். அப்போது துர்வாச முனிவரே சாபம் கொடுக்க உருவெடுத்ததுபோல் ரவீந்திரர் நின்றுகொண் டிருந்தார். இதைப் பார்த்ததும் போலீஸ் அதிகாரி நடுங்கிவிட்டார். அவரும் வங்காளிதான். "ஐயா, தெரியாமல் சுட்டு விட்டேன்" என்று தொலைவிலிருந்தே கை கூப்பியபடி கெஞ்சினார்.

ரவீந்திரர் நறநறவென்று பல்லைக் கடித்தார். அதிகாரி ரவீந்திரரின் அருகில் வந்து அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். ரவீந்திரரின் கோபம் சற்றுத் தணிந்தது. அவர் ஒன்றும் பேசாமல் படகில் போய் அமர்ந்தார்.

அதுமுதல் யாருமே பறவை வேட்டையாட அங்கே வருவதில்லை.



## 14. கவியின் தீர்ப்பு

ரவீந்திரரின் ஜமீனில் ஆற்றங்கரை யோரம் வலைஞர்கள் வாழும் பேட்டை ஒன்று இருந்தது. அங்கே புண்ணியா, உமா என்று இரண்டு பைராகிப் பெண்கள் வசித்து வந்தார் கள். இரண்டு பேரும் கிழவிகள். இருந்தாலும், புண்ணியாவைப் பார்த்தால் வயதான மாதிரி தெரியாது. கையில் கஞ்சிராவை எடுத்துக் கொண்டு அவள் ‘விஷ்ணு கீர்த்தனம்’ பாடத் தொடங்கினுல் போதும்; எல்லோருமே மெய்ம் மறந்து நிற்பார்கள். அவ்வளவு இனிமையான குரல். உமாவுக்கு ஒரு மகன் இருந்தான்; பத்து வயதுச் சிறுவன். அவனும் நன்ருகப் பாடு வான். இவர்கள் வீடு வீடாகப் போய்ப் பாடிப் பிச்சை எடுத்துப் பிழைத்தார்கள்.

இருவர் மனேக்கும் குறுக்கே ஒரு வேலி உண்டு. அதில் இருவருமே நாலைந்து அன்ஞ சிச் செடிகள் நட்டிருந்தார்கள் ; ஒருத்தி நட்ட செடிகள் காய்ந்து கருகிவிட்டன. மற்றவள் நட்டதில் பழங்கள் விட்டிருந்தன. அவை பறிப் பதற்கேற்றபடி பக்குவமாயிருந்தன. ஒரு நாள் உமா ஒரு பழம் பறித்தாள். உடனே புண்ணியா வாதுக்கு வந்துவிட்டாள். அது முற்றி அடி

தடிச் சண்டை ஆகிவிட்டது. அதற்குள் தலையாரி அங்கே வந்தான். அவர்களை ரவீந்திர ரிடம் அழைத்துக்கொண்டு போனான். அவ ரெதிரே பல முறை பாடி வழக்கம்; அதனால் புண்ணியா துணிவாகவே புறப்பட்டாள்.

நடந்ததை அவர் கேட்டறிந்தார். இரண்டு பேர் சொல்வதிலும் சிறிது உண்மைஇருந்தது. ஆனால் வேலி யாரைச் சேர்ந்தது என்பது தான் புரியவில்லை. அவர் சிரித்துக்கொண்டே "சரி, மற்றக் காய்களை இங்கே கொண்டுவந்து கட்டிவிடுங்கள். நன்றாகப் பழுக்கிற அன்று தீர்ப்பு. போய் வாருங்கள்" என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

விரைவில் அன்னாசிப் பழங்கள் பழுத்தன. சுற்றிலும் எங்கும் கம்மென்று பழத்தின் மணம் வீசியது. புண்ணியாவும் உமாவும் அவள் மகனும் முன்பே வந்துவிட்டார்கள். தீர்ப்பைக் கேட்க ஒரே கும்பல். ரவீந்திரர் முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக்கொண்டு, "உங்கள் இரண்டு பேரையுமே சும்மா விடப் போவ தில்லை! இந்த அற்பத்துக்கா இவ்வளவு அடிதடி?" என்றார்.

இரண்டு பெண்களும், "இனிமேல் சண்டை போட மாட்டோம்" என்று கை கூப்பிக் கெஞ்சினார்கள். ரவீந்திரர் முன்

போலவே, "அதெல்லாம் முடியாது. உமா உன் பிள்ளையைக் கூப்பிடு" என்றார். பையன் வந்ததும், "அடே! போய்ப் புண்ணியாவின் கையைப் பிடித்துகொண்டு, 'சித்தி' என்று கூப்பிடு" என்று உத்தரவிட்டார். பையனும் அப்படியே செய்தான். புண்ணியாவின் சினம் எங்கோ பறந்து போய்விட்டது. "உன் அம்மாவோடு சேர்ந்து கொண்டு இத்தனை நாள் திட்டினாயேடா, உம்... இருக்கட்டும்" என்றாள்; சிரித்தபடி அவனை மார்போடு தழுவிக் கொண்டாள்.

ரவீந்திரரும் பக்கென்று சிரித்துவிட்டார்; "அடே, உன் 'சித்தி'க்கு ஒரு பழத்தைக் கொடுத்துவிடு; மீதியை நீ எடுத்துக்கொள். காரியஸ்தரிடம் சொல்லி யிருக்கிறேன், வேலியைப்பற்றி. அவர் வந்து அதற்கு ஓர் ஏற்பாடு செய்வார். நீ முன்னால்போய் அந்த அன்னாசிச் செடிகளைப் பிடுங்கிப் பாதியை உன் புழைக் கடையிலும், மீதியைப் புண்ணியாவின் புழைக் கடையிலும் நட வேண்டும்" என்றார். புண்ணியாவைப் பார்த்து, "சரி, தீர்ப்பாயிற்று, ஒரு பாட்டுப் பாடு" என்றார்.

அன்று அவள் பாடின மாதிரி உருக்கமாக என்றுமே பாடினதில்லை. பிறகு எல்லாரும் மகிழ்ச்சியோடு விடை பெற்றனர்.

## 15. இரண்டு சொட்டுக் கண்ணீர்

ரவீந்திரர் 1932-இல் தம் நண்பர் ஒருவ ரின் வீட்டில் தங்கி யிருந்தார். அப்போது அவருடைய பெண் வயிற்றுப் பேரன் நீது இங்கிலாந்தில் படுத்த படுக்கையாகக் கிடந் தான். தீனபந்து ஆண்டிரூசுடன் ரவீந்திரரின் மகள் மீரா அவனைக் கவனித்துக்கொள்ள அங்கே போயிருந்தாள். ஒரு நாள் ஆண்டி ரூசிடமிருந்து, “நீதுவுக்கு உடம்பு சற்றுக் குணந்தான்” என்று கடிதம் வந்தது. இருந் தாலும், ரவீந்திரருக்கு அன்று மனம் என் னவோ, சரியாகவே இல்லை. நண்பரின் மனைவி யோடு நாள் முழுதும் மரணத்தைப் பற்றியே பேசிக்கொண்டி ருந்தார். கடைசியில், “விடி யற்காலை எழுந்தேன் ; மழைக் காலமல்லவா? உங்கள் தோட்டத்து மரஞ் செடி கொடிக ளெல்லாம் பச்சென்று புதுமையாக இருப்ப தைக் கவனித்தேன். என்ன இருந்தாலும் இயற்கையோடு ஒன்றிவிட்டால் மனத்துக்குச் சற்று ஆறுதல் ஏற்படுகிறது” என்றார்.

அன்று தினசரிப் பத்திரிகையில் நீது இறந்துபோன செய்தி வெளியாகி யிருந்தது. ரவீந்திரரின் பிள்ளை ரதிபாபு அங்கே வந்தார்.

"நீதுவைப் பற்றி வந்திருக்கிறதே செய்தி?" என்று ஆரம்பித்தார். "என்ன,குணந்தானே." என்ருர் ரவீந்திரர். "இல்லை" என்று சொல்லி மௌனமாக இருந்தார் ரதி பாபு; நடந்ததைப் புரிந்துகொண்டார் ரவீந்திரர். இரண்டு சொட்டுக் கண்ணீர்சிந்தினுர். பிறகு பெருமூச்சு விட்டுப் பழையபடி பேசத் தொடங்கினுர்., அன்று "குளக்கரையில்" என்ற ஓர் அற்புதமான கவிதையை எழுதினுர். அதையும் இன்னும் சில கவிதைகளையும் தொகுத்து 'மீண்டும்' என்ற புத்தகமாகப் பின்னுல் வெளியிட்டார். இந்த புத்தகத்தை நீதுவுக்கு அர்ப்பணம் செய்தார்.

சாந்திநிகேதனத்தில் அப்போது 'வர்ஷா மங்கலம்' (மழை விழா) என்ற விழாக் கொண்டாட ஏற்பாடெல்லாம் செய்திருந்தார்கள். நீது இறந்தது தெரிந்ததும் அங்கு இருந்தோர் விழாக் கொண்டாடுவதை நிறுத்திவிட முடிவு செய்தார்கள். எத்தனையோ முறை அப்படித் துயரம் அநுபவித்து, 'இன்ப துன்பம் இரண்டும் சமம்' என்று தேர்ந்து தெளிந்த பரம வேதாந்தி ரவீந்திரர். அதனுல் அவர் அதை, நிறுத்தக் கூடாது' என்று சொல்லித் தாமும் விழாவில் முக்கிய பங்கெடுத்துக் கொண்டார்.

# கவி மொழி

Karaikudi

கவியரசர் ஆழ்ந்த கருத்துடைய பல கதைகளை நம் பழைய நூல்களிலிருந்தும், புதுமை நிரம்பிய கவிதைகளைத் தம் கற்பனையிலிருந்தும் நம் நாட்டு மக்களுக்கு வழங்கி யிருக்கிறார். ஒவ்வொன்றிலும் தம் கைத்திறனைக் காட்டிக் குழந்தைகளுக்கும் எளி தில் விளங்குமாறு எழுதி யிருக்கிறார். இவைகளில் தேர்ந்தெடுத்த சிலவற்றை மட்டும் இங்கே மூல வங்காளியிலிருந்து மொழிபெயர்த்துத் தந்திருக் கிறோம்.

'அவர் பரந்த மனப்பான்மை உள்ளவர்; உல கமே ஒரு குடும்பம் என்ற பழம் பண்பாட்டில் ஊறியவர். புதுமையில் நல்லவற்றையும், பழமையில் சிறப்பு வாய்ந்தவற்றையும் பாராட்டுபவர். மேனாட் டினரையும் கீழ் நாட்டினரையும் இணைக்கும் பாலம் போன்று விளங்கினார்' என்பது இந்தக் கவிமொழி களினின்றும் நன்கு தெரியும்.

## பிரம்ம வித்தை

பொழுது சாய்ந்தது. சரசுவதி ஆற்றங் கரையில் இருந்த கௌதம முனிவரின் ஆசிர மத்துக்கு முனிகுமாரர்கள் எல்லோரும் திரும்பி வந்துகொண் டிருந்தார்கள். சில பேர் சுள்ளி களைத் தோளில் சுமந்து வந்தார்கள். இன்னும் சிலர் பசுமாடுகளை ஓட்டிவந்தார்கள். ஓமகுண் டத்து நெருப்பின் ஒளிபட்டு ஆசிரம முற்றம் பளிச்சென்று விளங்கியது. அவர்கள் ஓமகுண் டத்தைச் சுற்றி அமர்ந்ததும் கௌதமர், "குழந்தைகளே, உங்களுக்கு பிரம்மவித்தை பற்றி, அதாவது பரம் பொருளைப்பற்றிச் சொல்லப் போகிறேன். கவனமாகக் கேளுங் கள்" என்று தொடங்கினர்.

அப்போது கையில் மலரும் கனியும் ஏந்தி அழகிய சிறுவன் ஒருவன் அங்கே வந்தான். கௌதமரின் காலடியில் அவைகளை வைத்து அவரை வணங்கி நின்ருன். குயிலைப் போன்ற இனிய குரலில், "சுவாமி, எனக்கும் அந்தப் பிரம்ம வித்தையைக் கற்பித்தருள வேண்டும்", என்ருன்.

கௌதமர் புன்சிரிப்போடு, குரலில் அன்பு ததும்ப, "குழந்தாய்! உன் பெயர் என்ன? உன் கோத்திரம் என்ன? பிரம்ம குலத்தில் பிறந்தவர்களுக்குத்தான் அதைக் கேட்க உரிமை உண்டு" என்ருர்.

சிறுவன், "என் பெயர் சத்தியகாமன். கோத்திரம் எனக்குத் தெரியாது. என் தாயைக் கேட்டு நாளைக்கு வந்து சொல்கிறேன்" என்ருன். பிறகு அவரிடம் விடைபெற்றுக்கொண்டான். இருண்ட காட்டு வழியே ஆற்றைக் கடந்து, அக்கரையில் இருந்த தன் ஊருக்குப் போனுன்.

அதற்குள் ஊரே கண்ணயர்ந்து விட்டது. ஊர்க் கோடியில் ஆற்றங்கரையோரம் மணலிலே அவன் தாயின் குடிசை. அதில் விளக்கு இன்னும் எரிந்துகொண் டிருந்தது. அவன் தாய் ஜபாலை வெகு நேரமாக வாயிற்படியில் அவனுக்காகக் காத்திருந்தாள். சத்தியகாமன் உள்ளே வந்தான். தாய் அவனை மார்போடு அணைத்து உச்சி மோந்து, "போன காரியம் பலித்ததா?" என்று கேட்டாள். உடனே அவன், "அம்மா, என் தந்தையின பெயர் என்ன? நான் என்ன கோத்திரம்? பிரம்ம குலத்தில் பிறந்தவருக்குத்தான் பிரம்ம வித்தை

யைப் பற்றிக் கேட்க உரிமை உண்டாம்; கௌதமர் சொன்னார்" என்றான்.

ஜபாலை சற்றே தலைகுனிந்து நின்றாள். பிறகு, "அப்பா, நானோ ஏழை! சிறு வயதில் பல இடங்களில் வேலை செய்து பிழைத்து வந்தேன். அப்போது தான் உன்னைப் பெற்றெடுத்தேன். எனக்குப் புருஷனே இல்லை" என்றாள்.

மறு நாள் கௌதமரின் ஆசிரமத்தில் பொழுது புலர்ந்தது. முனி குமாரர்கள் குளித்து விட்டு, ஈரச் சடையை விரித்துப் போட்டபடி, பழைய ஆலமரம் ஒன்றின் கீழ்த் தியானத்தில் இருந்த கௌதமர் முன் அமர்ந்தார்கள். பறவைகளின் இன்னோசையும், வண்டுகளின் ரீங்காரமும், ஆற்று நீரின் கலகல ஒலியும் நிறைந்து ஆசிரமத்தில் இன்பம் குலவியது. முனி குமாரர்கள் இளங்குரல் எடுத்து அமைதி நிரம்பிய சாமகீதம் பாடத் தொடங்கினார்கள்.

அப்போது சத்தியகாமன் முன்போலவே கௌதமரின் முன் வந்து அவரை வணங்கி நின்றான். அவர் தியானத்திலிருந்து கண் விழித்து, "குழந்தாய், நீ என்ன கோத்திரம்?" என்று மீண்டும் கேட்டார்.

"சுவாமி, என்ன கோத்திரமோ தெரியாது. ஆனுல் என் தாய், "நான் சிறுவயதில் பல இடங்களில் வேலே செய்து பிழைத்துவந்தேன். அப்போது நான் பெற்றெடுத்த பிள்ளை நீ. எனக்குப் புருஷனே இல்லே" என்ருள். எனக்குத் தெரிந்தது இவ்வளவுதான், சுவாமி" என்ருன்.

இதைக் கேட்டதும் அங்கே இருந்த முனி குமாரர்களிடையே ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அவர்களில் சிலர் சத்தியகாமனைப் பார்த்துக் கைகொட்டி ஏளனம் செய்தார்கள். இன்னும் சிலர், "மானம் கெட்ட பயலே!" என்று சீறினர்கள்.

கௌதமர் தம் இடத்தை விட்டு எழுந்து சத்தயகாமனிடம் வந்தார்; "குழந்தாய், நீ உண்மையை ஒளிக்காமல் சொல்லிவிட்டாய். அதனுல் நீ உண்மையான அந்தணன் என்பதில் ஐயமேயில்லை" என்று அவனை அன்போடு அணைத்துக் கொண்டார்.

★

## மன்னனும் விகடனும்

காஞ்சி மன்னன் கர்நாடகத்தின்மீது படையெடுத்தான். போரில் அவனுக்கு வெற்றி கிடைத்தது; சந்தனமும் பொன்னும் மணியும் தன் யானைமேல் ஏற்றிக்கொண்டு நாட்டை நோக்கிப் புறப்பட்டான். வழியில் துர்க்கையின் கோயில். அங்கே உயிர்ப்பலி கொடுத்துத் தேவியை வழிபட்டான். வழிபாடு முடிந்தது. இரத்த நிற ஆடை அணிந்து, நெற்றியில் இரத்தச் சந்தனம் இட்டு, கழுத்தில் செம் பருத்தி மாலை அணிந்து மன்னன் திரும்பி வந்துகொண் டிருந்தான். மந்திரியும் விகடனும் மட்டும் இருந்தார்கள். ஒரு மாந்தோப்பில் சில சிறுவர்கள் என்னவோ விளையாடிக்கொண் டிருந்தார்கள். "என்ன விளையாடுகிறார்கள்; பார்த்து வரலாம்" என்று சொல்லி, மன்னன் அவர்கள் அருகில் போனான்.

சிறுவர்கள் பதுமைகளை வைத்துக்கொண்டு 'சண்டை விளையாட்டு' ஆடிக்கொண் டிருந்தார் கள். "யாருக்கும் யாருக்கும் சண்டை?" என்று மன்னன் அவர்களைக் கேட்டான்.

"கர்நாடக அரசனுக்கும் காஞ்சி அரசனுக்கும்."

"யார் வென்றார்? யார் தோற்றார்?"—

"கர்நாடக அரசன் வென்றான்; காஞ்சி அரசன் தோற்றான்."

மந்திரியின் முகத்தில் ஈயாடவில்லை. மன்னனின் கண்கள் சிவந்தன. ஆனால் விகடன் மட்டும் இடியிடி என்று சிரித்தான்.

மன்னன் சேனைகளுடன் திரும்பினான். சிறுவர்கள் முன்போலவே விளையாடிக்கொண்டு தான் இருந்தார்கள். "ஒவ்வொரு பயலாக இழுத்து வந்து மரத்தில் கட்டிப் பிரம்பால் அடியுங்கள்!" என்று மன்னன் உத்தர விட்டான்.

இதைக் கேட்டு அந்தச் சிறுவர்களின் பெற்றோர்கள் ஓடோடி வந்தார்கள். மன்னனுடைய காலில் விழுந்து, "அவர்கள் ஒன்றும் அறியாத குழந்தைகள்; ஏதோ விளையாடிக் கொண்டிருந்தார்கள். மன்னித்து விடுங்கள்!" என்று கெஞ்சினார்கள்.

மன்னனின் கோபம் தணியவில்லை. சேனாதிபதியை அழைத்தான்; "இந்த ஊரார்களுக்குக் காஞ்சி மன்னன் நினைவு என்றென்

றும் இருக்கும்படி சரியான பாடம் கற்பிக்க வேண்டும்" என்று உத்தரவிட்டுக் கூடாரத்துக்குத் திரும்பினுன்.

மாலை நேரம்; சேனுதிபதி மன்னனின் எதிரே வணங்கி நின்ருன்; "மகாராஜா, இனிமேல் அங்கே நாயும் நரியுந்தான் ஊளையிடும்; மனித சந்ததியே கேட்காதபடி செய்துவிட்டேன்" என்ருன்.

மந்திரி, "நம் அரசரின் மானம் நிலைத்தது; அவர் பெருமை ஓங்குக!" என்ருன்.

அரச குடும்பத்துப் புரோகிதன், "அரசருக்குத் தேவி இப்படியே என்றென்றும் அருள் புரிவாளாக!" என்று வாழ்த்தினுன்.

அப்போது விகடன் எழுந்து மன்னனை வணங்கி, "அரசே! எனக்கு விடை கொடுத்து அனுப்புங்கள்" என்ருன்.

அரசன் வியப்போடு, "ஏன்?" என்று கேட்டான்.

விகடன், "வெட்டவோ கொல்லவோ எனக்குத் தெரியாதே, அரசே! ஆண்டவன் அருளால் சிரிக்க மட்டுந்தான் தெரியும். இனிமேல் தங்கள் சபையில் இருந்தால் அதுகூட மறந்துவிடும்; போய் வருகிறேன்" என்று புறப்பட்டு விட்டான்.

## எங்கிருந்து வந்தது ?

குழந்தையின் கண்ணில் குதித்து விளை யாடுகிறதே, இந்த நித்திரை எங்கிருந்து வந்தது? யாருக்காவது தெரியுமோ ?

ஆம்; தெரியும். வனதேவதைகள் வாழும் காட்டிலே மின்மினிகள் விளக்கேற்றும் ஓர் இடம் உண்டு. அங்கே தொங்கிக்கொண் டிருக்கும் அந்த மலர் மொட்டிலிருந்துதான் இந்த நித்திரை குழந்தையின் கண்களை முத்தமிட வருகிறது.

குழந்தையின் உதட்டிலே தவழ்கிறதே இந்தப் புன்சிரிப்பு. இது எங்கே பிறந்தது ?

ஆம் ; தெரியும். பனி படிந்து புனிதமான ஒரு நாள் காலைக் கனவிலே, பிறைச் சந்திர னின் வெண்கதிர் ஒன்று, மறைந்தோடும் தோடை மேகத்தைத் தொட்டது. அங்கேதான் முதல் முதலாகப் பிறந்தது இந்தப் புன்சிரிப்பு.

குழந்தையின் மேனியிலே மலரும் இந்தப் புதுமையும் மென்மையும், இத்தனை காலமும் எங்கே ஒளிந்து கிடந்தன ?

ஆம் ; தெரியும். தாய் இளமை கொழிக்கும் மங்கையாக இருந்தபோது, அவள் இதய மெங்கும் இது கனிந்து பரவிக் கிடந்தது.

## பைத்தியக்காரன் அநுபவம்

தொட்டதையெல்லாம் பொன்னுக்கும் பரிசவேதிக் கல்லைத் தேடிக்கொண்டு ஊர் ஊராய் அலைந்தான் ஒரு பைத்தியக்காரன். அவன் தலை மயிரெல்லாம் சடை கட்டிப்போய் இருந்தது. உடல் முழுவதும் வெயிலில் பட்டுக் கன்றி, இளைத்துக் கிடந்தது. கண்கள் மட்டும் மின்மினியைப்போல் ஒளிர்ந்தன.

எதிரே எல்லை காணாத கடல் குமுறியது. அலைகளின் இரைச்சல், "ஆழ்கடலில் நிதிக் குவியல் கிடப்பது உனக்குத் தெரியவில்லையே!" என்று அவனை எள்ளி நகைப்பது போல் இருந்தது.

அவனது நம்பிக்கை தளர்ந்தது. அப்படியும் அவனுக்கு ஓய்ச்சல் ஒழிவில்லை; தேடித் திரிவதே அவன் தொழிலாகிவிட்டதே!

கடல் தன் அலைக்கரம் நீட்டி வானத்தைத் தொட முயன்றது; ஆனால் முடிந்தால்தானே? விண்மீன்கள் எதையோ அடைய எண்ணி அதைச்சுற்றிச் சுற்றி அலைந்தன. ஆனால் முடிந்தால் தானே? அப்படியே அந்தப் பைத்தியக்காரனும் பரிசவேதியைத் தேடித் தன்னந் தனியே, கடற்கரையில் அலைந்தான்.

ஒருநாள் பட்டிக்காட்டுச் சிறுவன் ஒருவன் அவனிடம் வந்து, "ஐயா, உங்கள் கழுத்தில்

தங்கச் சங்கிலி தொங்குகிறதே, அது எங்கே கிடைத்தது ? " என்றான்.

பைத்தியக்காரன் திடுக்கிட்டு அதைப் பார்த்துக்கொண்டான். முன்னே இரும்பில் செய்து போட்டது. இப்போது தங்கமாக மாறி விட்டது ! இது கனவோ ?-இல்லை ; உண்மை தான். ஆனால் எப்போது இப்படி மாறியதோ அவனுக்கே தெரியாது !

தலையில் ஓங்கி அடித்துக்கொண்டு, 'எப்போது இப்படி ஆயிற்று ?' என்று எண்ண மிடலானான்.

கூழாங்கல்லைப் பார்க்கும்போதெல்லாம் அதை எடுத்துச் சங்கிலியைத் தொட்டுத் தொட்டு அவனுக்குப் பழக்கமாய்ப் போய்விட் டது. அந்தப் பரபரப்பில் சங்கிலி நிறம் மாறிற்று என்றுகூட அவன் கவனிப்பதில்லை. இரும் பைப் பொன்னாக்கும் பரிசவேதிக் கல்லைக் கண்டுபிடித்தும், அதை அவன் கைநழுவ விட்டு விட்டான். பாவம், பொழுது சாயும் நேரம். வானம் பொன்னாய் ஒளிர்ந்தது. அதை அவன் கவனித்தால்தானே ! மறுபடியும் பரிசவேதிக் கல்லைத் தேடப் புறப்பட்டான். ஆனால் அவன் வலிமை முழுவதும் இப்போது ஒடுங்கிவிட்டது. வேரற்ற மரம்போல் அவன் உள்ளம் முறிந்து விட்டது.

★

## பேராசை மூற்றிப் பக்தி

மழையும் புயலும் ஓய்ந்தன. சுதாசனின் தோட்டத்துப் பொய்கையில் பூத்த தாமரை மலர்கள் சிதைந்துவிட்டன. அதில் கடைசியாக ஒன்றே ஒன்றுதான் தப்பியது. அதை அரசனிடமே நேரில் கொடுத்து விலையாக்க வேண்டும் என்று சுதாசனுக்கு ஆசை. அரண்மனை வாயிலருகில் போய் நின்றான்.

அப்போது ஒரு வழிப்போக்கன், "ஏன் அப்பா, ஒரு விலை சொல்; நான் அதை வாங்கிப் புத்த பகவானுக்குச் சமர்ப்பிக்கிறேன்" என்றான்.

"ஒரு பொன் கொடுங்கள். இதோ தருகிறேன்" என்றான் சுதாசன்.

வழிப்போக்கன் அப்படியே கொடுத்தான்.

அப்போது அரசனே புத்தரைத் தரிசித்து வர அரண்மனையிலிருந்து புறப்பட்டான். "இந்த மழைக் காலத்தில் இவ்வளவு அழகான மலர் கிடைப்பது அரிது; இதை வாங்கிப் புத்தருடைய காலடியில் வைப்பதுதான் தகுதி" என்று அவனுக்குப் பட்டது; உடனே சுதாசனுக்குப் பத்துப் பொன் கொடுக்க வந்தான்.

இதைப் பார்த்ததும் வழிப்போக்கன்; "நான் இருபது பொன் கொடுக்கிறேன்" என்ருன். சுதாசனுக்குப் பேராசை பிடித்து விட்டது. அந்தப் புத்தரிடமே இதைக் கொடுத்தால் இன்னும் ஏராளமாகக் கிடைக்குமே என்று அவன் எண்ணினுன். "நான் விற்கப் போவதில்லை" என்று அவர்களிடம் சொல்லி விட்டான்.

நகருக்கு வெளியே அமைதியாக நிழல் தரும் ஒரு மாந்தோப்பு. அங்கே போய்ப் புத்தருக்கு எதிரில் நின்ருன் சுதாசன். அவருடைய இதழ்களில் அன்பின் மோனம் திகழ்ந்தது. இலையுதிர் காலத்து இளங் காலையில் ஒளிரும் விண்மீன்போல் அவர் கண்ணிலிருந்து அமைதி சுடர் விட்டது.

சுதாசன் அவர் முகத்தை நெடுநேரம் நோக்கியபடி இருந்தான். பிறகு அந்தத் தாமரையை அவர் காலடியில் வைத்துத் தலை மண்ணில்பட வணங்கி நின்ருன். புத்தர் புன்சிரிப்புடன், "என்ன வேண்டும் குழந்தாய்!" என்று கேட்டார்.

சுதாசன், "சுவாமி, தங்கள் பாதமலரைத் தொடக் கொடுத்து வைத்தேனே; அதுவே போதும்" என்று அகங் குழையச் சொன்ருன்.

## மன்னனும் துறவியும்

"மகாராஜா, மகாத்மா நரோத்தமர் நீங்கள்கட்டின கோயிலுக்குள் நுழையமாட்டாராம். சாலை ஓரம் மரத்தடியில் உட்கார்ந்து கடவுள் மேல் ஏதோ பாடிக்கொண் டிருக்கிறார். தங்கக் கிண்ணத்தில் இருக்கும் தேனை விட்டு விட்டு, வெண் தாமரையை மொய்க்கும் வண்டுகளைப் போல், எல்லாரும் அவரைச்சுற்றியே கூடி யிருக்கிறார்கள்" என்று காவலாள் வந்து மன்னனிடம் தெரிவித்தான்.

மன்னன் ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்றான். பிறகு நரோத்தமரிடம் போனான். அங்கே புல் தரையில் அவர் அமர்ந்திருந்தார். அவரை நெருங்கி, "சுவாமி, தங்கத்தால் ஆன என் கோயிலை விட்டு இந்த மண் தரையில் இருந்துகொண்டு கடவுளை துதிப்பதேன்?" என்றான்.

"நீ கட்டின கோயிலில் கடவுள் இல்லை. அதனால்தான்."

அரசன் கடுகடுப்புடன் அவரை நோக்கினான்; "என்ன சொன்னீர்கள்? இரண்டு கோடி ரூபாய் செலவழித்து அந்தக் கோயிலைக் கட்டினேன், தெரியுமா?" என்றான்.

“தெரியாமல் என்ன? அந்த ஆண்டு வீடு பற்றி எரிந்துபோய் எத்தனையோ மக்கள் உன்னிடம் வந்து முறையிட்டுக் கொண்டார்களே; நீ கூட அதைக் காதில் போட்டுககொள்ளாமல் இருந்தாயே; அதுவுந்தான் நினைவு இருக்கிறது.”

“அப்போது கடவுள் என்ன சொன்னார், தெரியுமா? ‘துயரப்படும் சகோதரர்களுக்கு இடங் கொடுக்காத அந்தத் தரித்திரப் பயலா எனக்கு கோயில் கட்டிவிடப் போகிறான்!’ என்று சொல்லி அந்த ஏழைகளோடு ஏழையாகச் சாலையோரம் இருக்கும் இந்த மரத்தடிக்கு வந்துவிட்டார். நீ கட்டின தங்க கோயிலுக்குள் இனி ஒன்றுமில்லை, அப்பனே! அங்கே அகந்தைதான் குடிகொண்டிருக்கிறது” என்றார்.

மன்னனுக்குக் கோபம் மேலிட்டது. “என் நாட்டை விட்டுப் போய்விடும்” என்று கட்டளை இட்டான்.

மகாத்மா நரோத்தமர், “சரி; அப்படியே போகிறேன். கூடவே கடவுளும் இந்த நாட்டை விட்டுப் புறப்பட்டு விடுவார். அப்பனே, கவலைப்படாதே!” என்று அமைதியாகப் பதில் அளித்தார்.

## வாளுக்கு அஞ்சாத பெண்

புத்தருடைய சின்னத்தின்மேல் பிம்பிசார மன்னன் சலவைக் கல் கோயில் ஒன்று எழுப்பினுன். அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் எல்லாரும் அங்கே வந்து, புத்தரின் சிலேமீது மலர் சொரிந்து, விளக்கேற்றிச் செல்வார்கள்.

பிம்பிசாரனின் மகன் அஜாதசத்துரு அரசனுனதும் தந்தையின் கொள்கையை எதிர்த்து எங்கும் இரத்தக் களரியாக்கினுன். பௌத்த நூல்களைத் தீக்கிரையாக்கினுன். புத்தரின் பக்தரைக் கொன்று குவித்தான்.

ஒரு நாள் அந்தி நேரம். பூஜை வேளை நெருங்கியது. அரசியின் பணிப்பெண் ஸ்ரீமதிக்குப் புத்தரிடம் மிகுந்த பக்தி. அவள் புண்ணிய நீராடி, தங்கத் தட்டில் புதுவெண் மலரும் விளக்கும் ஏந்தி, அரசியின் எதிரே வந்து நின்றுள்.

அரசி அவளைக் கண்டதும் திகிலுற்று நடுங்கினுள்; "அசட்டுப் பெண்ணே ! புத்தரின் கோயிலுக்குப் போய் வணங்கினுல் என்ன தண்டனை தெரியுமோ ? சாவுதான் " என்றுள்.

ஸ்ரீமதி, "மன்னருடைய ஆணைப்படியே நடக்கட்டும்" என்று அரசியை வணங்கினுள்.

இளவரசன் புதிதாக மணந்த பெண் அமிதை என்னும் இளவரசி ஸ்ரீமதி அவளிடம் போனாள். பத்தரை மாற்றுத் தங்கக் கண்ணாடியை மடியில் ஏந்தி, கூந்தலை வாரி முடித்து, வகிட்டின் தொடக்கத்தில் குங்குமம் இட்டுக்கொண்டிருந் தாள் அமிதை. ஸ்ரீமதியைக் கண்டதும் அவள் நடுநடுங்கிப் போனாள். "ஐயோ! எனக்கும் ஆபத்தைக் கொண்டு வைக்காதேடி யம்மா; நீ போய்விடு" என்று அவளை வெளியே அனுப்பி விட்டாள். இளவரசி சுக்கிலை சாளரத்தருகில் அமர்ந்து அந்தி வெயிலில் காவியம் படித்த வண்ணம் இருந்தாள். நைவேத்தியம் ஏந்தி வரும் ஸ்ரீமதியைக் கண்டதும் இளவரசியின் மடியிலிருந்த புத்தகம் நழுவிக் கீழே விழுந்தது. ஸ்ரீமதியின் காதோடு, "உனக்கு ஏனடி இந்தத் துணிச்சல்? ஏன் வீணாகச் சாகப் போகிறாய்?" என்றாள்.

ஸ்ரீமதி ஒவ்வோர் அறை வாசலிலும் போய்த் தலைநிமிர்ந்து, "புறப்படுங்கள், நம் ஐயனைத் தொழும் நேரம் நெருங்கிவிட்டது" என்று கூறினாள்.

சிலர் கதவை மூடிக்கொண்டார்கள். சிலர் அவளைத் திட்டினார்கள். அரண்மனைக் கோபுரத் தில் அந்தி ஒளி மங்கியது. வீதிகளில் இருள்

செறிந்தது. நகரச் சந்தடி அடங்கிவிட்டது. எங்கோ கோயில் மணி ஓசை கேட்டது. அங்கே அந்தி பூஜை நடக்கும் நேரம். ஆழ்ந்து தெளிந்த நீர்நிலைபோல் இலையுதிர்கால வானத்தில் நட்சத்திர மணிகள் துடித்தன. அப்போது அரண்மனைக் காவலாட்கள், பூங்காவில் மரங்களின் இடுக்கு வழியாகப் புத்தரின் சந்நிதியிலே விளக்கு வரிசை தெரிவதைக் கண்டு திடுக்கிட்டார்கள்; கத்தியை உருவிக்கொண்டு அங்கே ஓடினார்கள்; " மடப் பெண்ணே, நீ யார் ? அவ்வளவு துணிச்சலா உனக்கு?" என்று கடிந்து கொண்டார்கள்.

" நான் ஸ்ரீமதி; புத்த பகவானின் தொண்டில் ஈடுபட்டவள்" என்று ஓர் இனிய குரல் கேட்டது.

மறுகணம் ஸ்ரீமதியின் இருதய இரத்தம் புத்தரின் சலவைக் கல் உருவில் படிந்து அதைச் செந்நிறமாக்கியது.

நட்சத்திரங்கள் அமைதியாக ஒளிர்ந்தன. அதே சமயம் சந்நிதியில் எரிந்து கொண்டிருந்த கடைசி விளக்கும் மங்கி அணைந்தது.



## கடவுளைக் காணும் விதம்

குரு ராமானந்தர் நாள் முழுவதும் உபவாசம் இருப்பார்; ஜபதபங்களில் ஈடுபட்டிருப்பார். அன்று அவர் செய்யும் பூஜையைக் காண அரசனும் அரசியும் வந்தார்கள். பெரிய பெரிய பண்டிதர்களும், பல சின்னங்களைத் தரித்த பல மதத்தினரும் வந்தார்கள். மாலை நீராடிய பின் தம் இஷ்ட தெய்வத்தை வழிபட்டார் ராமானந்தர். ஆனால் ஏனோ அவர் உள்ளத்தில் அன்று அமைதியே இல்லை! வழக்கம்போல் சாப்பிடும் துளி பிரசாதத்தையும் அவர் உட்கொள்ளவில்லை.

இப்படி இரண்டு நாட்கள் கழிந்தன. உள்ளம் நைந்து மண்ணில் புரண்டு, "என் ஐயனே என்ன தவறு செய்தேன்?" என்று கதறினார். பிறகு களைத்துப் போய்த் தூங்கினார். ஆகா! என்ன அற்புதமான கனவு! பகவானே அவர் எதிரில் நின்றார்; அடே! நான் வைகுண்டத்தில் மட்டுந்தானா இருக்கிறேன்? தீண்டாதார் என்று சொல்லி அன்று அனேகம் பேரை என்னிடம் வராதபடி தடுத்தாயே; நினைவு இருக்கிறதா? அவர்களோடுதான் நான் எப்போதும் வாழ்கிறேன். அவர்களை அவமானப்படுத்தி

ளுய்! நீ கொடுப்பதை மட்டும் நான் ஏற்க வேண்டுமோ?" என்ருர்.

"ஐயனே, பிழையைப் பொறுத்தருள். அதிகாலே எழுந்தவுடன் என் செருக்கையெல்லாம் விட்டு ஒழிக்கிறேன். உன் அடியார்களோடு சேருகிறேன்" என்ருர் ராமானந்தர்.

அப்போது நடுநிசி. வானத்தில் விண்மீன்கள் தியானத்தில் ஆழ்ந்திருந்தன. தூக்கம் கலேந்து எழுந்தார் ராமானந்தர். "ஞானுேதயமான பிறகு பொழுது வேறு விடியக் காத்திருக்க வேண்டுமா? இப்போதே போ!" என்றது ஒரு குரல்.

ராமானந்தர் தன்னந்தனியே புறப்பட்டார். மேலே துருவ நட்சத்திரம் வழி காட்டியது. நகர எல்லேயைத் தாண்டி ஒரு கிராமத்தை அடைந்தார். அங்கே ஆற்றங்கரையில் ஒரு சுடுகாடு. தீண்டாதான் ஒருவன், எரியும் சவத்தைப் புரட்டிக்கொண் டிருந்தான். ராமானந்தர் ஓடிப்போய் அவனேத் தம் இரு கைகளாலும் தழுவிக் கொண்டார்.

"ஐயோ, சாமி! நான் ஈனத்தொழில் செய்பவனுயிற்றே! இந்தப் பழிக்கு என்னே ஆளாக்க வேண்டாம்" என்ருன் அவன்.

ராமானந்தர், "அப்பனே! என் உள்ளம் செத்துவிட்டது! அதைக் கை தூக்கிவிட உன்னால்தான் முடியும். அதற்காகவே வந்தேன்" என்றார்.

பொழுது விடியும் வேளை. புள்ளினம் கூவின. கபீர் தம் குடிசையின் எதிரே உள்ள முற்றத்தில் அமர்ந்து துணி நெய்தபடி ராமனைத் துதித்துக்கொண்டிருந்தார். ராமானந்தர் அவரை அணுகி இறுக அணைத்துக்கொண்டார்.

கபீர் பயந்துபோய், "ஐயோ சாமி! நான் மிலேச்சனாயிற்றே!" என்றார். ராமானந்தர், "அப்பனே! இத்தனை நாள் உன்னைப்போன்ற உத்தமர்களைக் காணக் கொடுத்து வைக்காத பாவி நான். என் அறிவு மங்கிக் கிடந்தது" என்றார் உள்ளம் குழைய.

அப்போது அவருடைய சீடர்கள் அவரைத் தேடிக்கொண்டு அங்கே வந்தார்கள்; குருவின் நிலையைக் கண்டு, "இதென்ன இப்படிச்செய்து விட்டீர்களே!" என்று திகிலோடு கேட்டார்கள்.

ராமானந்தர், "இன்றுதான் என் ஐயனைக் கண்டேன்" என்று மெய்ம்மறந்து கூத்தாடினார். காலைக் கதிரவனின் ஒளி அவரது களி பொங்கும் முகத்தில் வீசியது.

## எறிந்த மாணிக்கம்

கங்கைக் கரையிலே உட்கார்ந்து, சநாத னர் என்ற பக்தர் ஜபமாலையை உருட்டிக் கொண்டிருந்தார். கந்தல் உடுத்த ஒருவன் அங்கே வந்து, "ஐயா, நான் ஓர் ஏழை. ஏதா வது உதவுங்கள்" என்ருன்.

"பிச்சை எடுக்கும் ஓர் ஓடுதான் என்னி டம் இருக்கிறது. எனக்கிருந்த பிற செல் வத்தை யெல்லாம் நான் தானம் அளித்து விட்டேன்" என்ருர் சநாதனர்.

"ஆனுல், சிவபெருமான் என் கனவிலே தோன்றி, உங்களிடம் என்னை வரச் சொன் ஞரே" என்று கேட்டான் வந்தவன்.

சநாதனருக்குச் சட்டென்று அந்தக் கல்லைப்பற்றிய நினைவு வந்தது. ஆற்றங்கரை யிலே கூழாங்கற்களுக்கு நடுவிலே அவர் கண்டெடுத்தது அந்த விலையுயர்ந்த மாணிக் கம். அது யாருக்காவது பயன்படலாம் என்று எண்ணி, மணலிலே அதைப் புதைத்து வைத்திருந்தார்.

வந்தவனுக்கு அந்த இடத்தை அவர் காட்டினுர். வியப்போடு அவன் அங்கே

தோண்டி அந்த மாணிக்கத்தைக் கையில் எடுத்துவிட்டான்.

மரங்களுக்குப் பின்னே மாலே வெயில் மறையத் தொடங்கியது. ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு இடையர்கள் வீடு திரும்பும் நேரம் வரைக்கும், அவன் அப்படியே தரையில் உட்கார்ந்து என்னவோ எண்ணமிட்டுக் கொண்டே இருந்தான்.

பிறகு அவன் எழுந்து, மெல்ல நடந்து சநாதனரிடம் வந்தான். “பிரபுவே, உலகத்துச் செல்வத்தையெல்லாம் இழிவெனத் தள்ளும் பெருஞ் செல்வத்திலே ஒரு துளியை எனக்கு அருளுங்கள், போதும்” என்றுன்.

அந்த விலேயற்ற மாணிக்கத்தையும் உடனே கங்கையில் வீசி எறிந்தான்.



## உலக வாஞ்சை

அன்றொரு நாள், பெயர் ஏதும் இன்றி அழுத வாயோடு இந்த உலகத்துக்கு நான் வந்து சேர்ந்தேன்.

இன்றோ என் குரலிலே களிப்பு நிறைந்திருக்கிறது; என் வாழ்வைப் பூர்த்தி செய்ய எனக்கு இடம் அளித்து, என் பிரபுவான தாங்கள் ஒதுங்கி நிற்கிறீர்கள்.

என் கவிதைகளைத் தங்களுக்குக் காணிக்கையாகத்தான் வைக்கிறேன். அப்போதுகூட மனிதர் பலர் வந்து அவைகளைப் பாராட்ட வேண்டுமென்றே உள்ளுக்குள் எனக்கு ஆசை எழுகிறது.

இந்த உலகத்தின்மீது நான் இவ்வளவு ஆசை வைத்திருப்பதைக் கண்டதும், தாங்கள் என்னிடம் அருள் கூர்ந்து உவகையே அடைகிறீர்கள், ஐயனே!



## கணவன் மீண்ட விதம்

பக்த துளசிதாசர் சிந்தனையில் ஆழ்ந்த படி கங்கைக்கரைச் சுடுகாட்டில் திரிந்துகொண்டிருந்தார். அங்கே ஒரு பெண், மணக் கோலத்தில் தன் கணவன் சவத்தருகில் அமர்ந்திருந்தாள். துளசிதாசரைப் பார்த்ததும் அவள் எழுந்து வணங்கி, "சுவாமி, என் புருஷரோடு உடன்கட்டை ஏறிச் சொர்க்கம் போய்ச் சேருகிறேன். எனக்கு ஆசி கூறி அருள வேண்டும்" என்று வேண்டினுள்.

"இந்த பூமிமட்டும் யார் படைத்தது? அதே கடவுள்தானே? இதை விட்டு இப்போதே ஏன் போக விரும்புகிருய், அம்மா?" என்ருர் துளசிதாசர்.

"சொர்க்கம் வேண்டவில்லே, நான். என் கணவரே வேண்டும்."

துளசிதாசர் சற்றே சிரித்தபடி, "குழந்தாய், வீட்டுக்குத் திரும்பிப் போ. இன்னும் ஒருமாதம் பொறு. உன் கணவன் நிச்சயமாகக் கிடைப்பான், பார்" என்று ஆறுதல் சொன்ஞர்.

அந்தப் பெண் அவர் சொன்னதை அப்படியே நம்பி வீடு திரும்பினுள். துளசி

தாசர் தினந்தோறும் அங்கே வந்து உயர்ந்த கருத்துக்களை அவளுக்கு உபதேசித்தார். அவளும் அவற்றைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்க லானாள். வரவர அவள் உள்ளத்தில் தெய்வீக அன்பு பெருக்கெடுத்தது.

அந்த மாதம் முடிந்ததும் அண்டை அயல் வீட்டார் அவளைக் காண வந்தார்கள்.

"உன் கணவர் கிடைத்துவிடுவார் என்றாயே; எங்கே, அவரைக் காணோமே?" என்றார்கள்.

அந்தப் பெண், "ஆகா, கிடைத்து விட்டாரே!" என்றாள்.

அவர்கள் ஆவலோடு, "எங்கே? எங்கே?" என்று கேட்டார்கள்.

"என் உள்ளத்தில் குடிகொண்டு, என்னோடு இரண்டறக் கலந்துவிட்டார்" என்று அவள் பதில் அளித்தாள்.



## இளைஞன் உறுதி

"குருதாசபுரக் கோட்டையை முற்றுகை யிடுங்கள்" என்று மொகல் பாதுஷா கட்டளை யிட்டார். கோட்டையின் தலைவன் பந்தா சிங்கன் சிறந்த சீக்கிய வீரன். பீரங்கிக் குண்டு கள் கோட்டை மதிலைத் தாக்கிப் பிளந்தன.

கோட்டைக்குள் உணவுப் பொருளே இல்லை; விறகுக்குக்கூடப் பஞ்சம். பல நாள் நரக வேதனையில் உழன்ற பிறகு மொகலாயர் கையில் கோட்டை சிக்கியது. அவர்கள் சீக்கியர்களை யெல்லாம் வெட்டி வீழ்த்தினார்கள். "எங்கள் குரு வாழ்க!" என்று கூவிக்கொண்டே சீக்கியர்கள் ஒவ் வொருவராகத் தரையில் சாய்ந்தார்கள்.

நிகால சிங்கன் ஓர் இளைஞன். தேவசிற்பி கடைந்தெடுத்தது போன்ற வடிவழகன். பால் வடியும் அவன் முகத்தில் உள்ளத்தின் உறுதி ஒளிர்ந்தது. இளங்காலையில் கடவுளை வழிபடும் போது உண்டாகும் அமைதி, அவன் கண்களில் திகழ்ந்தது. காவலாட்கள் அவனைக் கட்டிப் பிடித்துக் கொலைக்களத்தில் கொண்டு வந்து நிறுத்தினார்கள். அந்தக் காட்சியைக்

கண்டு அங்கிருந்த எல்லோருமே மனம் உருகினார்கள்.

இதோ ஒரு கணத்தில் கொலையாளியின் வாள் நிகால சிங்கன் கழுத்தில் விழப் போகிறது. இந்த நேரத்தில் தலைநகரிலிருந்து தூதன் ஒருவன் ஓடிவந்து மொகலாய வீரர்க ளிடம் ஓர் ஓலையை நீட்டினான். அது அவர்கள் தலைவன் கையெழுத்திட்ட விடுதலைச் சீட்டு!

இளைஞன் கை விலங்கை அவர்கள் உடனே நீக்கிவிட்டார்கள். அவன், "எனக்கு மட்டும் ஏன் விடுதலை?" என்றான்.

"நீ சீக்கியன் அல்ல; வலுக் கட்டாயமாக உன்னைச் சீக்கியனாக்கினார்களாம்; உன் தாய் சொன்னாள்; அதனால்தான் உன்னை மன்னித்து விட்டார்கள்" என்று பதில் வந்தது.

சினமும் அவமானமும் மேலிட, முகம் சிவந்து நின்றான் நிகால சிங்கன். "சீச்சீ! இப் படிப் பொய் பேசி என்மேல் கருணை காட்டச் சொல்லாதீர்கள்? இதோ சத்தியமாகச் சொல் கிறேன்: நான் சீக்கியன்தான்; சத் ஸ்ரீ அகால்! குரு வாழ்க!" என்று கூவித் தன் தலையைத் தாழ்த்தினான்.

வாளை ஓங்கி வீசினான் கொலையாளி. நிகால சிங்கன் தலை வேறு, உடல் வேறு ஆயிற்று. அங்கிருந்த எல்லோரும், "ஆ" என்று கதறிக் கண்ணை மூடிக்கொண்டார்கள்.

அன்று முதல் தேர்த் திருநாள். அக்கம் பக்கத்தில் இருந்த கிராம மக்கள் அதைப் பார்க்கத் திரளாகக் கூடியிருந்தனர். அந்தக் கிராமத்தில் உயர் குலத்தவர் நடத்தி வைக்கும் விழா அது. கிராமத்தினர் மிகவும் உற்சாகத்துடன விழாவுக்கான ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். கோயிலருகில் இருந்த தேர் நிலையில் அலங்கரிக்கப் பெற்று நின்றது; பெரிய தேர்.

அந்தணர் பூரண கும்பங்களை ஏந்தி மந்திரம் ஓதிய வண்ணம் கோயிலினுள் இருந்தனர். வீரர்கள் வாளுடன் கோயில் முழுவதும் அணிவகுத்துச் சுற்றி வந்தார்கள். வைசியர்கள் பெட்டி பெட்டியாக நகை நட்டுக்களை எடுத்து வந்து கொடுத்தார்கள்.

உரிய வேளையில் விக்கிரகம் நன்கு அலங்கரிக்கப் பெற்றுத் தேரில் வைக்கப் பெற்றது. மக்களின் உற்சாகத்துக்குக் கங்குகரை இல்லை. வீரர் ஒரு புறமும், வைசியர் ஒரு புறமும் தேர்வடம் பிடித்தனர். நிலையிலிருந்து தேர் புறப்பட்டது.

மக்கள் வாய் திறந்தபடி அந்தக் காட்சி யைப் பார்த்து மகிழ்ந்தவண்ணம் இருந்தார் கள். அப்போது மிகத் தொலேவில் அந்த ஊர் அடிமைகளில் ஒருவன்- உயர்குல மக்களுக்காக நிலத்தை உழுது பயிரிடும் ஏழை - வந்து கொண்டிருந்தான்.

"எட்டிப் போ! எட்டிப் போ" என்று உயர் குல மக்களின் குரல்கள் எழுந்தன.

"கடவுள் சந்நிதியில் அந்த அடிமை எப்படி வரலாம்?" என்று வைசியன் ஒருவனும் வீரன் ஒருவனும் பிரம்பால் அவனே அடித்து விரட்டி விட்டார்கள். அவன் பாவம், பயந்து போய் அவ்விடத்திலிருந்து ஓட்டம் பிடித்தான்.

தேர் ஆடி அசைந்துகொண்டே, மாட வீதிகளின் வழியே சென்று கொண்டிருந்தது. சட்டென்று ஓர் இடத்தில், பாட்டையில் இருந்த பள்ளம் ஒன்றில் ஒரு சக்கரம் பதிந் தது. மேலோடு மண் போட்டிருந்ததால் முத லில் பள்ளம் தெரியவில்லே. ஆனல் தேரின் சக்கரம் நன்ருக அழுந்திய பிறகுதான், அங்கே சேறு இருப்பது புலனுயிற்று. வீரர்களும், வைசிய இளேஞர்களும் தம் பலங்கொண்ட மட்டும் தேரை இழுத்துப் பார்த்தார்கள். ஆனல் அது நகர்ந்தால்தானே!

அவர்களுக்கு வேர்த்தது. உடலில் சோர்வு தட்டியது. இனிமேல் தங்களால் முடியாது என்ற நிலையில் இருந்தார்கள். அப்போது, "இனி எப்படித் தேரை இழுத்துப் போய்ச் சேர்ப்பது?" என்ற கேள்வி எழுந்தது. எவருக்கும் என்ன செய்வது என்றே புரியவில்லை.

எதிரே ஒரு பைத்தியக்காரன் போய்க் கொண்டிருந்தான். அவன் அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டே, "அதோ அந்தப் பக்கம் பாருங்களேன் !" என்ருன், தொலைவிலிருந்த அடிமைகளின் குடிசைகளை நோக்கி. கிராமத் தலைவனுக்குச் சட்டென்று ஓர் எண்ணம் தோன்றியது; "ஆம்; எளிதில் தேரை இழுத் துச் செல்ல முடியும்" என்பதுதான் அது.

அவன் அதை மற்றவர்களிடம் தெரிவித் தான். முதலில் அதற்கு எதிர்ப்பு இருந்தது. ஆயினும் கடைசியில், "சரி, என்ன செய்வது? தேர் பாதி வழியில் நிற்பது அதைவிடப் பாவமாயிற்றே!" என்று யாரோ சொன்ஞர்.

உடனே உழுது பயிரிடும் அடிமைகளுக்கு ஆள் விட்டு அனுப்பினுர்கள். பிரம்படிபட்ட அடிமையே அந்த ஆள். அடிமைகளின் குடிசை

களில் கலகலப்பு ஏற்பட்டது. திரண்டு எழுந்தனர் உழவர்கள். எப்படித்தான் அந்தச் சிறு குடிசைகளில் அத்தனை மக்களும் அடங்கிக் கிடந்தனரோ!

வீரர்களும் வைசிய இளைஞர்களும் தேர் வடத்தை விட்டு விட்டு அந்த எளிய மக்களின் வரவை எதிர்பார்த்தார்கள். அடிமைகள் தேர் வடத்தைப் பிடிக்கும்போது திருநீறு அணிந்த மேனியராய் நின்றனர். பிறகு சிங்கம் உறுமுவதுபோல் ஒரு சத்தம் கேட்டது. பார்த்துக் கொண்டே இருக்கையில் தேர்ச் சக்கரம் ஆட்டங் கொடுத்துப் பள்ளத்திலிருந்து எழும்பிச் சமதரைக்கு வந்தது.

எளியோர் மகிழ்ச்சியுடன் ஆரவாரம் செய்தனர். வீரரும் வைசியரும் தம் பலவீனத்தை எண்ணித் தலை தாழ்த்தினர். அந்தணர் அதை மறைக்கவோ என்னவோ பெருங்குரல் எடுத்து மறையொலி எழுப்பினர். அதுமுதல் தேர் ஓட்டும் உரிமை அந்த உழவருக்குக் கிடைத்துவிட்டது. அவர்கள் சமூகத்தின் ஜீவநாடி என்பதை உயர் குலத்தவர் ஏற்காமல் என்ன செய்வது?



## கவிஞன் ஒப்பந்தம்

"என்னை அடிமை கொள்ளுவார் உண்டோ?" என் கேட்டுக்கொண்டே வீதி வழியே ஒரு நாள் காலையில் நான் நடந்து கொண்டிருந்தேன்.

கையில் வாள் ஏந்தி, தேரிலே பவனி வந்தார் அரசர்.

அவர் என் கையைப் பிடித்துக்கொண்டு, "என் அதிகாரத்தால் உன்னை நான் அடிமை கொள்கிறேன்" என்ருர்.

அவருடைய அதிகாரம் என்னிடம் செல்லவில்லை. தேரைச் செலுத்தியபடியே, அவர் தம் வழியே சென்றுவிட்டார்.

வெயில் எரிக்கும் உச்சி வேளையில் வீட்டுக் கதவுகளெல்லாம் மூடியிருந்தன. வளைந்து தெளிந்த சந்து ஒன்றிலே நான் அலைந்து கொண் டிருந்தேன். பை நிறையத் தங்கத்தை எடுத்துக் கொண்டு ஒரு கிழவன் என் எதிரே வந்தான்.

அவன் சற்றுத் தயங்கிய பின், "என் தங்கத்தைக் கொண்டு உன்னை நான் அடிமை கொள்வேன்" என்ருன்.

தன் தங்கக் காசுகளை அவன் ஒவ்வொன்ருக எடை போட்டுக் காட்டினுன்.

அவனுக்கு இணங்காது நான் அகன்றேன்.

மாலை நேரம் தோட்டத்துச் செடிகள் எல்லாம் பூத்து மணம் வீசின. அழகு நிறைந்த கன்னிப் பெண் ஒருத்தி வெளியே வந்தாள். "என் புன்சிரிப்பால் உன்னை நான் அடிமை கொள்வேன்" என்ருள்.

ஆனுல் அவள் சிரிப்பு மங்கிக் கண்ணீர் வெள்ளத்திலே கரைந்து போயிற்று. தன்னந் தனியே திரும்பி இருளில் மறைந்தாள்.

கடற்கரை மணலிலே சூரிய ஒளி விழுந்து பளபளத்துக்கொண் டிருந்தது. அலைகள் குறும் புத்தனமாக வீசின.

ஒரு பாலகன் மணலில் அமர்ந்து கிளிஞ் சிலை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான்.

தலையை நிமிர்த்தி, என்னிடம் வெகு நாள் பழகியவனைப்போல், "ஒன்றுமே இல்லாமல் உன்னை நான் அடிமை கொள்கிறேன்" என்ருன் அந்தச் சிறுவன்.

பாலகனின் விளையாட்டிலே அந்த ஒப்பந்தம் பிறந்த கணத்திலிருந்து நான் சுதந்திர மனிதன் ஆகிவிட்டேன்.

# விடுதலை

## 1

தன் கனவில் கண்ட கண்ணனை எதிர் நோக்கியிருந்தாள் ஒரு பேதை. பூந்தோட்டத்தின் மூலையிலே ஒரு மேடை அமைத்தாள்; அதிலே அவன் உருவத்தை மண்ணிலே அமைக்க உட்கார்ந்தாள். அவள் மனத்தில் இருந்த அந்த உருவ்த்தைச் சிறிது சிறிதாக எண்ணிப் பார்க்கும்போது அவள் கண்களில் நீர் வரும். ஆனால் மண்பொம்மை உருவாக உருவாக மனத்தில் இருந்த கண்ணன் உருவம் மங்கி வந்தது. தன் மேலேயே அவளுக்கு எரிச்சலாக வந்தது. பின்னும் கடுமையாக உடலை வருத்திக்கொண்டாள்; பழமும் நீருமே உட்கொண்டாள். புல்லையே படுக்கையாகக் கொண்டு நோன்பு நோற்றாள். உள்ளத்தில் இருந்த அந்த உருவத்தைச் செய்து முடிக்க முடிக்க உள்ளம் வெறிச்சென்று ஆகி வந்தது. 'அப்படி ஒன்றும் நாம் அருமையாகச் செய்து முடிக்கவில்லை' என்று அவளுக்குத் தோன்றியது. இன்னும் சிறப்பாகச் செய்துவிட வேண்டும் என்று முயன்றாள். கனவில் கண்ட

உருவுக்கும் அதற்கும் உள்ள வேற்றுமை மிகுதியாகிக்கொண்டே வந்தது.

அந்த உருவத்துக்குத் தன் நகைகளை எல்லாம் போட்டுப் பார்த்தாள். நாளுக்கு நூறு தாமரை மலர்களுக்குமேல் எடுத்துவந்து அதை வழிபட்டாள். மாலை நேரத்தில் அதன் எதிரே மணமிகுந்த தைலவிளக்கு ஏற்றினாள். அது தங்கக் குத்துவிளக்கு. தைலத்தின் விலையோ அதிகம். நாளுக்குநாள் உருவத்தின் கழுத்தில் நகைகளை மிகுதியாகப் போட்டுக் குவித்தாள். பூஜைப் பொருள்கள் மேடையை மட்டும் என்ன, உருவத்தையே மறைத்துவிட்டன!

2

சிறுவன் ஒருவன் அப்போது அந்தப் பக்கம் வந்தான். "என்னுடன் விளையாட வருகிறாயா ?" என்றான்.

"எங்கே?"

"இங்கே தான்: இந்த மேடையின் அருகில்."

பேதை பரபரப்போடு, "இங்கே யாரும் விளையாடவே கூடாது" என்றாள். அவன் போய்விட்டான்.

இன்னொரு பையன் வந்தான்; "பூப் பறித்துக் கொள்கிறேனே" என்றான்.

"எங்கே?"

"இதோ இந்த மேடை அருகில் இருக்கும் சண்பக மரத்திலிருந்துதான்."

பேதை அந்தப் பையனை அடித்து, "இங்கே யாரும் பூப் பறிக்கக்கூடாது...போ!' என்று விரட்டினாள். அவனும் போய்விட்டான்.

மற்றொரு பையன் அங்கே வந்தான். "மாலை நேரமாகிவிட்டது. இருட்டி வருகிறது. வழி தெரியவில்லை. இந்த விளக்கைக் கொஞ்சம் கொடு" என்றான்.

"எந்த விளக்கு?"

"இதோ, இந்த மேடையில் இருக்கிறதே; இதுதான்."

பேதை சீறி எழுந்து அந்தப் பையனையும் அடித்து, "சீ, போ! நான் ஒன்றும் தர மாட்டேன்" என்று விரட்டிவிட்டாள்.

3

அந்தச் சிறுவர்கள் எல்லோரும் போனதும் வேறொரு சிறுவர் கூட்டம் அங்கே வந்தது. அவர்கள் ஆடியும் பாடியும் வருவதைச் சற்று நேரம் கண்கொட்டாமல்பார்த்துக்கொண்டிருந்தாள் பேதை. பிறகு திடுக்கிட்டு, "ஐயோ! இவரை மறந்தே போய்விட்டேனே!" என்று, தான் செய்த கண்ணனின் உருவத்தைப் பார்த்து நாணித் தலை குனிந்துகொண்டாள்.

தேர்த் திருநாள் நெருங்கியது. அந்த ஊரில் வயதான தாத்தா ஒருவர் இருந்தார். அவர் அந்தப் பெண்ணைப் பார்த்து, "ஏன் அம்மா, தேர் பார்க்க வரவில்லையா?" என்ருர்.

பேதை, "நான் எங்கேயும் போகப் போவதில்லை" என்ருள்.

தாத்தா போய்விட்டார்.

பிறகு அவள் தோழி வந்தாள். "திருநாள் பார்க்க வரவில்லையாடி?" என்ருள்.

"எனக்கு வர நேரமில்லை" என்ருள் பேதை.

அவள் தம்பி வந்து கூப்பிட்டான். "என்னையும் தேர்த் திருநாளுக்கு அழைத்துக் கொண்டு போ, அக்கா" என்ருன்.

"முடியாது. நான் பூஜை செய்யவேண்டும்?"

4

இரவு அங்கேயே கண் அயர்ந்தாள் பேதை. அதற்கிடையேகூட மக்கள் போய் வரும் இரைச்சல் கேட்டுக்கொண்டிருந்தது. சிலபேர் வண்டியில் போஞர்கள்; சிலபேர் நடந்து போஞர்கள்; சிலபேர் முதுகில் மூட்டை இருந்தது. சிலர் கையை வீசிக்கொண்டு போஞர்கள்.

விடியற்காலை. அவள் தூக்கம் கலைந்து எழுந்திருந்தாள். வழிப்போக்கரின் பாட்டும்

பறவைகளின் இன்னெலியும் அன்று ஏனே அவள் காதில் விழவில்லை.

சட்டென்று, "நாமும் புறப்பட்டுப் போக லாம்" என்று சிறிது தூரம் போனுள். ஆனல் உடனே, 'ஐயோ! பூஜை பண்ணவேண்டுமே! அதைவிட்டு எப்படிப் போவது?' என்ற நினைவு வந்தது. திரும்பி வந்தாள், மேடைக்கு அருகே. ஆனல் அங்கே அவள் செய்து வைத்த கண்ணன் உருவமோ மேடையோ இருந்தால் தானே! வழிப்போக்கர் போய்ப் போய், அது ஒற்றையடிப் பாதை ஆகிவிட்டது!

'ஐயோ! அது போய்விட்டதே!' என்று முதலில் தோன்றியது அவளுக்கு. உடனே 'போனல் போகட்டுமே! நாம் நினைத்தபடி அது அமையவில்லை. தொலையட்டும்' என்று நிம்மதி யாகப் பெருமூச்சு விட்டாள்.

அப்போது அவள் சின்னஞ்சிறு தம்பி வந் தான்; "என்னைத் திருநாளுக்கு இப்போதாவது அழைத்துக்கொண்டு போ, அக்கா" என்ருன்.

"சரி, வா" என்று சொல்லிக் கொண்டே மேடையும் உருவமும் இருந்த வழியாக அவள் புறப்பட்டாள்.

அவள் தன் கனவில் கண்ட கண்ணன் உருவம் இப்பொழுது எங்கே பார்த்தாலும் அவ ளுக்குத் தெளிவாகத் தெரிந்தது! அவள் மனத் தில் ஏதோ பெரிய தளையிலிருந்து தான் விடு தலை பெற்றதுபோல் மகிழ்ச்சி பொங்கியது.

## வீரனது கௌரவம்

பாதுஷா அவுரங்கஜீபு சிம்மாசனத்திலே அமர்ந்திருந்தார். சபை கூடியிருந்தது. மார்வார் நாட்டுக் கிழ மன்னன் யசோவந்தன் மொகலாய ஆட்சிக்கு அடங்கி நடப்பவன். அவன் எழுந்து நின்று, "பாதுஷா அவர்களுக்கு ஒரு விண்ணப்பம்: அசலக் கோட்டையை முற்றுகையிட்டுச் சிரோகி மன்னரை இரவோடு இரவாகக் கைது செய்துகொண்டு வந்துவிட்டார்கள் நம் வீரர்கள். அவர் இப்போது என் அறையில்தான் இருக்கிறார். தங்கள் கட்டளை என்னவோ?" என்று பணிவுடன் கேட்டான்.

"என்ன, என்ன, அதிசயமாக இருக்கிறதே! இத்தனை நாள் யார் கையிலும் அகப்படாமல் தனிக் காட்டு ராஜாவாகத் திரிந்த ராஜபுத்திரர் அவர் ஒருவர்தாம். சரி, சரி; அவரைப் பார்க்க வேண்டும். அழைத்து வரச் சொல்லுங்கள்" என்றார் பாதுஷா.

யசோவந்தன் கைகூப்பி, "ராஜபுத்திர குலத்துச் சிங்கம் அவர். என் வீட்டில் விருந்தினராக வந்திருக்கிறார். பாதுஷாவை ஒன்று கேட்டுக்கொள்கிறேன்; அவமானப்படுத்தாமல் அவருக்குரிய கௌரவத்தோடு சபையில்

அவரை வரவேற்கவேண்டும்" என்று கேட்டுக் கொண்டான்.

பாதுஷா இடி இடி என்று சிரித்தார்; "இதென்ன நீங்கள்கூட இப்படிப் பேசுகிறீர் களே! வயதானவர்; மிக்க தீரர். அப்படிப்பட் டவருக்கு மதிப்புத்தராதிருப்பேனே? நீங்களே சொல்லுங்கள். நீங்கள் இப்படிப் பேசுவது எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. வீண் கவலை வேண்டாம். அவரைச் சபைக்கு அழைத்து வாருங்கள்" என்றார்.

சிரோகி மன்னனை அழைத்துக்கொண்டு யசோவந்தன் சபைக்கு வந்தான். நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையோடு சிரோகி மன்னன் பாதுஷாவின் முன் வந்து நின்றான். சபையில் இருந்தவர்கள் எல்லோரும் பாதுஷாவை வணங்கு" என்று கூவினார்கள்.

சிரோகி மன்னன், "பெரியோரைத் தவிர வேறு எவருக்கும் இந்தத் தலை வணங்காது" என்று உறுதியாகப் பதில் சொன்னான்.

காவலாட்களின் கண்கள்சிவந்தன;"அதை வணங்க வைக்கிற விதம் எங்களுக்குத் தெரியும்; அதிகமாகப்பேசினாயானால் தலை கீழே உருளும் என்று சீறினார்கள். சிரோகி மன்னன் புன்சிரிப்

போடு, "பயந்துகொண்டு யாரையும் இந்தத் தலை வணங்காது" என்று தன் இடுப்பில் இருந்த கத்தியை உறுவினான்.

பாதுஷா எழுந்து வந்து அன்போடு சிரோகி மன்னனின் கையைப்பற்றி அவனைச் சிம்மாசனத்தில் தம் பக்கத்தில் அமர்த்திக் கொண்டார். "நீர் சிறந்த வீரர் என்று எனக்குத் தெரியும். இந்தப் பாரத நாட்டில் உமக்கு மிகவும் பிடித்த இடம் எது?" என்று கேட்டார்.

"அசலக் கோட்டைப் பிரதேசந்தான்" என்றான் அந்த ராஜபுத்திர வீரன்; இதைக் கேட்டதும் சபையோர் கைகொட்டி ஏளனச் சிரிப்புச் சிரித்தார்கள்.

ஆனால் பாதுஷா அவுரங்கஜீபோ, "உம் விருப்பப்படியே அசலக்கோட்டையை நிம்மதி யாக ஆண்டு வாரும்" என்று சொல்லிச் சிரோகி மன்னனை அணைத்துக்கொண்டார்.



## ஞானோதயம்

ஒரு நாள் விடியற்காலை. பாட்டையில் நின்றுகொண்டு இரண்டு சிறுவர்கள் ஏதோ பேசிக்கொண் டிருந்தார்கள். முதல் சிறுவன், "பார்க்கிறாயா? என்ன பந்தயம்? கோயிலில் அவர் வளர்க்கிற மாதவிக் கொடியிலிருந்து நிறையப் பூப் பறித்துக்கொண்டு வருகிறேன்" என்று மார்பைத் தட்டிக்கொண்டான். இன்னொரு சிறுவன், "முடியவே முடியாது" என்றான்.

'இதுகூடவா முடியாது?' என்று நமக்குத் தோன்றலாம். ஆனால் முழு விவரமும் தெரிந்தால் அது அத்தனை எளிய காரியம் அல்ல என்பது புரிந்துவிடும்.

மாதவசந்திரர் காலமாகி வெகு நாட்கள் ஆகிவிட்டன. அவருக்குச் சொந்தமான ராதா கிருஷ்ணர் கோயில் பொறுப்பை எல்லாம் இப்போது அவருடைய மனைவி ஜயகாளி அம்மாள்தான் கவனித்து வருகிறாள். அந்தப் பக்கத்திலே தர்க்கத்தில் மாதவசந்திரருக்கு நிகரே இல்லை. ஆனால் சொந்த வீட்டில் அவர் வாயடங்கிக் கிடந்தார். மாதவசந்திரர் பல பேருக்குக் கடன் கொடுத்திருந்தார். அவை

களையெல்லாம் ஒரு தம்படி பாக்கி இல்லாமல் அம்மாள் தன் கெடுபிடியினுலேயே வசூலித்து விட்டாள் என்ருல் பாருங்கள்! யாராலும் அவளை ஏமாற்றவே முடியவில்லை. அம்மாள் உயரமாகவும் பருமனுகவும் ஆண் பிள்ளைபோல் இருந்ததால் பெண்களில் இவளுக்கு ஏற்ற தோழிமார் எவருமே இல்லை. ஏன் அவளைக் கண்டாலே அவர்களுக்கெல்லாம் நடுக்கம்; அவள் எதிரில் யாரையுமே குறை கூறி வம்பு பேசவும் மாட்டார்கள். ஆண்களேகூட ஊர் மண்டபத்தில் ஏதாவது வம்பு பேசிக்கொண் டிருக்கும்போது அவள் ஒரு பார்வை பார்த்தால் போதும்; சும்மா இருந்து விடுவார்கள். ஊரில் பொதுவாக ஏதாவது விசேஷம் என்ருல், அவளுடைய மேற்பார்வையின்றி நடக்கவே நடக்காது. அவளுக்குத்தான் எதிலும் முதல் இடம். யாருக்காவது உடம்பு சரியில்லை என்ருல் அவளைக் கேட்டுத்தான் மருந்து, பத்தியம் எல்லாம் கொடுப்பார்கள். அவ்வளவு நன்ருக உடம்பைக் கவனித்துச் சிகிச்சை செய்வாள். பத்தியம் தவறினுல் அவளுக்குக் கோபம் கோபமாக வந்துவிடும். யமனுக்கு அஞ்சா விட்டாலும் அவளுக்கு அடங்கித்தான் ஆகவேண்டும்.

அவளுக்குக் குழந்தை குட்டியே இல்லை.

தன் மருமக்கள்மார் இரண்டுபேரை வளர்த்து வந்தாள். இவர்களின் பெற்ருேர் - அவள் தம்பியும் மதனியும் - இவர்கள் குழந்தைகளாக இருந்தபோதே ஏதோ நோய் கண்டு இறந்து விட்டார்கள். பாவம், பெரியவனுக்கு வயது 18 இருக்கும். அநேகம் பேர் பெண் கொடுக்க முன் வந்தார்கள். பையனுக்கும் ஆசைதான். இருந்தாலும், அத்தை அதற்கெல்லாம் இடங் கொடுத்தால்தானே! அவள், "பையனுக்கு முதலில் வேலே கிடைக்கட்டும்; பிறகு மணம் செய்து பெண்ணே வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்தால் போகிறது" என்று சொல்லிவிட்டாள்.

ராதாகிருஷ்ணர் கோயிலே அம்மாள் கண்ணுங் கருத்துமாகக் கவனித்து வந்தாள். அதன் முற்றத்தை நன்ருக மெழுகி வைப் பாள். ஒரு புல் இருக்க வேண்டுமே; அதன் ஒரு மூலேயில்தான் அந்த மாதவிக் கொடி கப்பும் கிளேயும் விட்டுச் செழித்துப் படர்ந்திருந்தது. அதிலிருந்து ஓர் இலே கீழே உதிர்ந்தால்கூட உடனே பெருக்கிச் சுத்த மாக்கிவிடுவாள். முன்னெல்லாம் ஊர்ப் பிள்ளேகள் அந்தக் கொடி மறைவில் ஒளிந்து கொண்டு விளேயாடுவார்கள்; எப்போதாவது இரண்டோர் ஆட்டுக் குட்டியும் அதன் இளந்

தளிரை மேய்வதுண்டு. அப்போது பூஜை கூடச் சரியாக நடைபெறுவதில்லை. ஆனால் ஜயகாளி கவனிக்கத் தொடங்கியதிலிருந்து எல்லாம் சீராயின. அவள் வெகு கண்டிப்பாக இருந்தாள்.

அசுத்தமானவர்கள் யாராக இருந்தாலும் அங்கு வரக்கூடாது; ஒரு சமயம் அவள் தங்கையின் கணவன் அந்த ஊருக்கு வந்திருந்தான். அவன் பட்டணத்தில் சர்க்கார் உத்தியோகஸ்தன் ; மேல்நாட்டு ரீதியில் பழகியவன். கோயிலைப் பார்க்க வந்தான். ஜயகாளி அம்மாள் உடனே, "இங்கே நீ நுழையக் கூடாது" என்று தடுத்துவிட்டாள். இதனால் அதுமுதல் தங்கைக்கும் தமக்கைக்கும் மன வேற்றுமை ஏற்பட்டுப் பேச்சு வார்த்தைகூட நின்று விட்டது. அப்படி அக்கறையாக அவ்விடத்தைக் கவனித்து வந்தாள். அந்த ராதாகிருஷ்ணர் விக்கிரகம், அந்த மாதவிக் கொடி படர்ந்த கோயில் என்றால் அவளுக்கு உயிர். தன்னையே அந்தக் கோயிலுக்கு அர்ப்பணம் செய்திருந்தாள்.

மார்பைத் தட்டி அந்த மாதவிக் கொடியிலிருந்து பூவைப் பறிப்பதாகச் சொன்னானே, அந்தப் பையன் யார் தெரியுமா? அவள் சின்ன மருமகன் நளினன்தான். அத்தையின்

குணம் அவனுக்கு நன்ருகத் தெரியும். இருந்தா லும் அவனுக்குத் துணிச்சல் மிகுதி. இந்த விஷயத்தில் அவன் தன் அத்தையையே உரித்துக்கொண்டு வந்திருந்தான். சிறுவயதில் இதற்குமேல் சண்டியாக அவள் இருந்திருக் கிருள் என்று ஊர் வதந்தி.

ஜயகாளி அன்று பகல் வழக்கம்போல் ராதாகிருஷ்ணர் சந்நிதியில் அமர்ந்து கையில் துளசி மாலே உருட்டியபடி ஜபத்தில் ஈடுபட் டிருந்தாள். நளினன் ஓசைப்படாமல் அந்த மாதவிப் பந்தலண்டை வந்து நின்ருன். கீழ் மட்டத்திலிருந்த பூக்களேயெல்லாம் ஏற்கனவே அவன்பறித்துவிட்டிருந்தான். நளினன் மெல்ல அங்கே அமைந்திருந்த பலகை மேடைமேல் ஏறினுன். மேலே ஒரு பெரிய பூங்கொத்து இருப்பது தெரிந்தது. கையை நீட்டி அதைப் பறிக்கப்போனுன். சட்டென்று பலகை முறிந்து தடால் என்று கீழே விழுந்தான். பூங்கொத் துள்ள கொடி பிய்ந்துவிட்டது.

ஜயகாளி இந்தச் சத்தத்தைக் கேட்டுப் பரபரவென்று வெளியே வந்தாள். சின்ன மருமகனுக்குக் காலில் பலமான உள் காயம். அதனுல் சும்மா இருந்துவிட முடியுமா? அவ ளுக்கு வந்த கோபத்தில் கைகொண்ட மட்டும்

பையன் முதுகில் நன்ருக அடித்தாள். பையன் ஒரு பொட்டுக் கண்ணீர்கூடச் சிந்தாமல் மௌனமாக அதைப் பொறுத்துக் கொண்டான். பிறகு அவனை ஓர் அறையில் தள்ளிப் பூட்டிவிட்டாள். அன்று பையனுக்குச் சோறு போடக்கூடாது என்றும் உத்தரவிட்டு விட்டாள்.

இதைக் கேட்டதும் வீட்டுச் சமையற்காரிக்குப் பொலபொலவென்று கண்ணீர் வந்துவிட்டது. எவ்வளவு வேண்டிக்கொண்டும் ஜயகாளியின் மனம் இரங்கவே இல்லை; அவளுக்குத் தெரியாமல் உணவு கொடுப்பதென்ருல் நடக்காத காரியம்.

மேடையைச் சீர்படுத்த ஆளுக்கு உத்தரவிட்டுவிட்டு மறுபடியும் ஜபமாலையுடன் சந்நிதிக்கு வந்து சேர்ந்தாள் ஜயகாளி. சற்று நேரங் கழித்துச் சமையற்காரி அந்தப் பக்கம் வந்து தயங்கித் தயங்கி, "அத்தையம்மா, பிள்ளையாண்டான் பசியினுல் துடிக்கிருனே, பாலாவது கொடுக்கிறேனே" என்று கெஞ்சினுள்.

ஜயகாளி முன் போலவே கடுமையாக 'கூடாது' என்று தடுத்துவிட்டாள். தூரத்தில் ஓர் அறையிலிருந்து நளினன் கதறி அழும்

சத்தம் கேட்டுக்கொண்டே யிருந்தது. பிறகு அழுது அழுது சோர்ந்து போய் அடிக்கடி பையன் விம்முவதுமட்டும் அவள் காதில் விழுந்துகொண் டிருந்தது. கடைசியில் அதுவும் அடங்கி விட்டது.

மாலே நேரம் வந்தது. திடீரென்று வெளியே 'வீக் வீக்' என்று ஒரு சத்தம் கேட்டது. பின்னாலேயே, "பிடி, பிடி" என்று ஐந்தாறுபேர் கூச்சலிடும் குரல் கேட்டது. முற்றத்தில் காலோசை கேட்கவே, ஜயகாளி திரும்பிப் பார்த்தாள். மாதவிக் கொடியை யாரோ உலுக்குகிறமாதிரி தோன்றிற்று. "நளினா! மறுபடியும் வந்துவிட்டாயா?" என்று சீறிக் கொண்டே எழுந்தாள் ஜயகாளி.

பதிலே இல்லே. கோபம்தலேக்கேற முற்றத்தில் மாதவிப் பந்தலருகில் வந்து, "நளினு!" என்று மறுபடியும் கூப்பிட்டாள்.

பதில் இல்லே. அடர்ந்திருந்த கொடியை விலக்கிப் பார்த்தாள். அங்கே சேறு படிந்த பன்றிக்குட்டி ஒன்று பதுங்கிக்கொண்டு பரிதாபமாக அவளேப் பார்த்தது. அந்த இடத்தில் அது பயத்தினுல் செய்து வைத்த காட்சி பார்க்கச் சகிக்கவில்லே. அந்தப் பக்கமாக வந்த பட்டர் உடனே தடியை எடுத்துக்கொண்டு அதை அடிக்க ஓடோடி வந்தார்.

ஜயகாளிக்கு என்ன தோன்றியதோ, அவரைத் தடுத்துவிட்டாள். அவள் கண்களி லிருந்து நீர் ஆருகப் பெருகியது. "அந்தப் பிள்ளையை வெளியே திறந்து விட்டுவிடுங்கள்" என்ருள்.

அப்போது வெளியே இருந்து சில ஒட் டர்கள், "அம்மா, அம்மா, அந்தப் பன்றிக் குட்டியை இப்படி ஓட்டிவிடுங்கள். பலி கொடுக் கப் போகிருேம்" என்று கூவினர்கள்.

ஜயகாளி, "போங்களடா! போங்கள்" என்று அதட்டிப் பட்டரைப் பார்த்து, "அவர் களுக்கு ஏதாவது ரூபாய் கொடுத்து அனுப்புங் கள். அவர்கள் போனதும் இந்தப் பன்றிக் குட்டியை மெதுவாக வெளியே கொண்டுபோய் விட்டுவிடுங்கள். அந்தப் பையனுக்கு விரைவில் பாலும் பழமும் கொண்டு போய்க் கொடுங்கள்" என்று சொல்லித் தொண்டை அடைக்கக் கோயிலுக்குள் நுழைந்தாள். உள் பக்கம் தாழ்ப்பாளைப் போட்டுக்கொண்டு விக்கிரகத் தின் காலடியில் விழுந்து உள்ளம் உருகக் கதறி அழுதாள்; அப்போது அவள் உகுத்த கண்ணீர் வெள்ளத்தில் அகங்காரமெல்லாம் கரைந்தோடியது.

## பிரார்த்தனை

பிரபுவே, இதுதான் என் பிரார்த்தனை; என் உள்ளத்திலே சூழ்ந்திருக்கும் தரித்திரத்தை வேரோடு அழித்து விடுங்கள்.

என் சுகங்களையும் துக்கங்களையும் எளிதில் தாங்கிக்கொள்ளக் கூடிய வலிமையை எனக்கு அருளுங்கள்.

என் அன்புப் பணிவிடையிலே ஈடுபட்டுக் கனிதரச் செய்யும் வலிமையை எனக்கு அருளுங்கள்.

